சுவாமிநாத தேசிகர் இயற்றிய

# திருச்செந்திற் கலம்பகம்



வெளியீடு

குமரன் குன்றம் திருப்புகழ் மன்றம்

குரோம்பேட்டை, சென்னை - 600 044

உ

கணபதி துணை

சுவாமிநாத தேசிகர் இயற்றிய

# திருச்செந்திற் கலம்பகம்

(தெளிவுரையுடன்)

தொகுப்பு

டாக்டர். கைலாசம் சுப்ரமணியம் MBBS., DTCD.,

வெளியீடு

**குமரன் குன்றம் திருப்புகழ் மன்றம்**

குரோம்பேட்டை, சென்னை - 600 044.

நூல் : **திருச்செந்திற் கலம்பகம்**

முதற் பதிப்பு : 13.04.2008

தொகுப்பு : மருத்துவர். **கைலாசம் சுப்ரமணியம்**, MBBS., DTCD.,
இணைஇயக்குநர் மருத்துவப் பணிகள் (ஓய்வு)
# 46 (36), அஸ்தினாபுரம் மெயின் ரோடு,
நேரு நகர், குரோம்பேட்டை,
சென்னை - 600 044.
போன்: 22235645, 98414 20780

பதிப்புரிமை &
வெளியிடுவோர் : குமரன் குன்றம் திருப்புகழ் மன்றம்
முருகுகவி அறப்பணி திருப்புகழ்
ஆராய்ச்சி மையம்,
# 20, சந்தான கிருஷ்ணா தெரு,
நேரு நகர், குரோம்பேட்டை,
சென்னை - 600 044.
போன்: 22235179, 43575988

வெளியீடு எண் : 5

அச்சிட்டோர் : சேம்பியன் பவர் பிரிண்டர்ஸ்,
5/3, சத்ய நாராயணா தெரு,
சென்னை - 600 033.
போன்: 55688733, 92832 29278

விலை : **ரூ. 30/-**

உ

கணபதி துணை

# திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து சுவாமிநாத தேசிகர் சரித்திர சங்கிரகம்

இந்நூல் செய்தருளிய சுவாமிநாததேசிகர் செந்தமிழ்ப் பாண்டித் திருவளநாட்டிலே சற்றேறக் குறைய நூற்றைம்பது வருடத்திற்கு முன்னர்ப் பரம்பரைச் சைவ வேளாளர் குலத்திலே திருவவதாரஞ்செய்து, நற்குணங்களுடன் வளர வளர்ந்து, இளமைப்பருவத்திலே திருக்கைலாய பரம்பரைத் திருவாவடு துறை ஆதீனத்தையடைந்து, அக்காலத்திலே எழுந்தருளியிருந்த ஞானதேசிகராயிருந்த அம்பலவாண தேசிகமூர்த்திகளை வணங்கிச் சமய விசேட தீக்ஷைகளைப் பெற்றுத், துறவறத்தை யடைந்து, நித்திய நியம கன்மங்களிலே வழுவாதொழுகி, அத் துறவற நூல்களைக் கற்றுணர்ந்து, தவத்தான் மனந் தூய்மை யுடையராகித், தம்முடைய ஞானதேசிகரை நீங்காது, அவரருட் பணி செய்து திருவணுக்கத் தொண்டராய் அமர்ந்திருந்தனர்.

அக்காலத்திலே முற்கூறிய பாண்டித் திருவளநாட்டிலே திரு நெல்வேலியெனுஞ் சிவபுரத்திலே பரம்பரைச் சைவ வேளாளர் குலத்திலே தாண்டவ மூர்த்திப் பிள்ளை செய்த தவத்தால் வந்துதித்த மயிலேறும் பெருமாள் பிள்ளையென்பவர் (இவர் கல் லாடத்திற்கு உரை செய்தவர்) கல்வி அறிவொழுக்கஞ் செல்வ முதலிய நன்மைகளிற் குறைவில்லா தவராய் மேற்கூறிய ஆதீனத்துக்குரிய சிஷ்யவர்க்கங்களிற் சிறந்தவராயிருந்தனர். அவர் ஆதீனத்துக்கு வழக்கப்படி வந்து ஞானதேசிகரைத் தரிசித்துச் செல்லுங்காலங்களில் ஓர்காலத்தில் இந்நூலாசிரியருடைய அறிவின் மிகுதியையும் ஒழுக்கமன்பு முதலிய நற்குணங்களையுங் கண்டு வியந்து, இளமைப் பருவத்திலே இக்குணங்களையுடையரா யிருத்தல் அருமையாமென வியந்து, நாங்கற்ற கல்விப் பொருளை இந்த முனிவருக்குக் கற்பித்தால் உலகத்திற்கு மிகப் பயன்படுவ தன்றி நமக்கும் இம்மை மறுமைப் பயனெய்துமெனக் கருதித், தங்கருத்தினை ஞானதேசிகர்பால் விண்ணப்பஞ்செய்து, அவர் கட்டளையிட் டருளியபடியே இந் நூலாசிரியரை அழைத்துக் கொண்டு சென்று, தமது வீட்டில் வைத்து மிகுந்த உபசாரத் துடன் கற்பிப்பாராயினார்.

அகத்திய மகாமுனிவருடைய முதன் மாணாக்கராகிய தொல் காப்பிய முனிவர் அருளிச்செய்த இலக்கண நூலாகிய தொல்காப் பியத்தின் உரையாகிய இளம்பூரணமும், பேராசிரியமும் சேனா வரையமும், நச்சினார்க்கினியமும் எனப்படு நான்குரைகளையும், மற்றை யிலக்கண நூல்களையும் திருவள்ளுவர் குறளுரையையும், திருக்கோவையாருரையையும், சிந்தாமணி முதலிய பஞ்ச காவியங்களையும் கலித்தொகை முதலிய சங்கச் செய்யுட்களையும் ஐயந்திரிபின்றி விளங்கு மாறு கற்பித்தனர்.

அன்றியும் வடமொழியினும் வல்லவராகக் கருதித் திருநெல் வேலிக்குக் கீழ்பாலுள்ள செப்பறைப்பதியில் வடமொழி வல்ல வராயிருந்த சிவப்பிராமணராகிய கனகசபாபதி சிவாசாரியரைக் கொண்டு, வியாகரண முதலிய நூல்களைக் கற்பித்தனர். அக்கனக சபாபதி சிவாசாரியார் வடமொழி கற்பித்தவர் என்பதனை இந்நூலாசிரியர் தாஞ்செய்தருளிய இலக்கணக் கொத்துப் பாயிரத் துள் "செப்பறைய பதியில் வாழ்சிவத் துவிசன் - கனக சபாபதி கருதுவடி நூற்கடற் றபோதனர் புகழுஞ் சைவாதி ராச - னுபய பதங்களை யுண்மையொடு பணிவாம்" எனக் கூறியதனாலறிக.

மயிலேறும்பெருமாள் பிள்ளை, தம்மை நீங்காது உடனிருந்து கற்றுத்தேறிய இந்நூலாசிரியரை ஆதீனத்துக்கு அழைத்துக் கொண்டு வந்து, ஞானதேசிகரைத் தரிசித்து, இந்நூலாசிரியருடைய கல்வித்திறமை யாவும் பரீக்ஷைசெய்து காட்டினார். ஞானதேசிகர் மிக மகிழ்ச்சியடைவதை அறிந்து, தாமும் பேரானந்தமுற்றவராகி இந்த முனிவரை ஞானாசாரிய மூர்த்தியாகச் செய்தால் உலகிற்குப் பேருபகாரமா மென்று, பெருங்காதலோடு விண்ணப்பஞ் செய்தனர். அதற்கு ஞானதேசிகர் "அவ்வாறே செய்வோம்" என்று திருவாய் மலர்ந்தருள, மனமகிழ்ந்து, வணங்கி விடைபெற்றுத், தமதிடத்திற்கு மீண்டு வந்திருந்தனர்.

பின்பு இந்நூலாசிரியர் நிருவாண தீக்ஷைபெற்று, வீடுபேற்றிற் குரிய ஞானநூல்களாகிய சிவஞானபோத முதலிய நூல்களை யெல்லாங் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தனர்.

அதன்பின்பு தாங்கற்ற இலக்கணவிலக்கியங்களிலே இலை மறை காய்போற் கிடந்த அரியவிதிகளை யெல்லாந்திரட்டிக், கற்றோர்கட்குப் பயனாகும்படி இலக்கணக்கொத்து எனவொரு நூலையும், தசகாரிய முதலிய ஞானநூல்களையுஞ் செய்தருளி னார்.

இவ்வாசிரியர் தமது ஆச்சிரமமும், தம்முடைய ஆசிரியா யிருந்த மயிலேறும்பெருமாள் பிள்ளை ஆச்சிரமமும் பேதமா

யிருப்பினும் அப்பேதங்கருதாது, தாஞ்செய்த இலக்கணக்கொத்துப் பாயிரத்திலே "திருநெல்வேலியெனுஞ் சிவபுரத்தன் றாண்டவ மூர்த்தி தந்த செந் தமிழ்க்கடல் வாழ்மயி லேறும் பெருமாண் மகிபதி யிருபத கமல மென்றலை மேற்கொண்டிலக் கொத்தென நூலியம்புவனே" யென வணக்கங்கூறினர். இவ்வாசிரியர் கல்வித் திறமையையும் நல்லொழுக்கங் குருபத்தி முதலிய நற்குணங் களையும் புகழ்ந்து பாராட்டாத கற்றோர்களில்லை.

இவ்வாறிருக்குங்காலத்திலே திருவாரூரென்னுஞ் சிவநகரத் திலே சைவாசாரியராயிருந்து, இலக்கணவிளக்க முதலிய நூல் களைச்செய்து, புலவர் திலகராயிருந்த வைத்தியநாதநாவலர், ஆதீனத்துக்கு வந்து ஞானதேசிகரைக்கண்டு கலந்து உரையாடி யிருந்து பந்தியிற் போசனஞ்செய்து, கரசுத்திசெய்துவந்து, பின்பு ஞானதேசிகரைக் காணுங்காலையில் ஞானதேசிகர் வைத்தியநாத நாவலரைநோக்கி "வந்தவிளைப்பாற் போசனஞ் செவ்வையாகச் செய்தற்கிசைய வில்லையோ" என வினாவ, அவர் "வந்த விளைப்பு" என்னுந் தொடர்மொழிக்கு இலக்கணம் விசாரிக்கத் தொடங்கினார். அப்பொழுது ஞானதேசிகர் தமதருகிருந்த இந் நூலாசிரியர் மீது திருக்கண் சாத்தியருள, உடனே இந்நூலாசிரியர் அச்சொற்குள்ள இலக்கணமெல்லாம் விரித்துரைத்தனர். அதைக்கேட்ட வைத்தியநாதநாவலர் மிக மகிழ்ச்சியடைந்து "தொல்காப்பிய முதலிய நூல்களை எழுத்தெண்ணிப் படித்த சுவாமிநாதமூர்த்தியா? தேவரீர் இங்ஙனங்கற்றுத் தெளிந்திருப்பதை யானறிந்திலேன்" என்று மிக்க விநயமொழிகூறி மிக வியந்தனர்.

பின்பு வைத்தியநாதநாவலர் இந்நூலாசிரியருடன் சிலநாள் அளவளாவியிருந்து, தொல்காப்பிய முதலிய நூல்களைப் பாராட்டி யிருந்ததுமன்றி, இலக்கணக்கொத்து முதலிய நூல் களையுங் கேட்டு "இங்ஙனஞ் செய்வது கற்றோர் யாவருக்கும் அரிது அரிது" என்று வியந்துகூறித் தமதிடத்திற்குச் சென்றனர்.

ஞானதேசிகர் மயிலேறும் பெருமாள்பிள்ளை விண்ணப்பஞ் செய்துகொண்டபடியே இந்நூலாசிரியருக்கு ஆசாரிய அபிஷேகஞ் செய்யத் திருவுளங்கொண்டு; அப்பொழுது இரண்டாவது சந்நிதானம் இருந்தமையால் இவ்வாசிரியருக்குச் சங்காபிஷேகஞ் செய்து, ஈசானதேசிகர் என்று அபிஷேகச் சிறப்புப் பெயருங் கட்டளையிட்டருளித், திருநெல்வேலியில் ஆதீனத்தைச் சார்ந்த மடாலயத்தி லிருக்கும்படி கட்டளையிட்டருளினர். அம்மடாலயத் திற்கு ஈசானமடாலயமென இன்றும் பெயராயிருக்கின்றது. அவ் வாறே இந்நூலாசிரியர் ஈசான மடாலயத்தில் எழுந்தருளியிருந்து நன்னூற்கு விருத்தியுரை செய்த சங்கரநமச்சிவாயப் புலவர்

முதலாயினர்க்குச் கற்பித்து இத்தேசத்திற்கு ஓர் தமிழ்த்தெய்வமாய் விளங்கியிருந்தனர்.

இச்சரித்திரத்தின் விரிவெல்லாம் ஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் அச்சிட்டு வெளிப்படுத்திய இலக்கணக்கொத்தினால் இனிது விளங்கும்.

ஈசான தேசிகர் அவ்வாறு விளங்கியிருக்குங் காலத்தில் திருச் செந்நூருக்குச் சென்று விசேட புண்ணிய காலங்கள் தோறும் முருகக்கடவுளைத் தரிசித்து வருவாராதலால், அம்முருகக் கடவுளின்மீது வைத்த பேரன்பினால், பலவிதமான செய்யுட்களுங் கலந்திருத்தலிற் கலம்பகமென்றுரைக்கும் இந்நூலை இயற்றிக், கற்றோருள்ளங் கனிந்து வாழ்த்த, முருகக் கடவுள் சந்நிதியில் அரங்கேற்றுவித்தனர். அன்று முதலாக இக்கலம்பகத்திலே முப்பது தோத்திரச்செய்யுள் வேறெடுத்து முருகக்கடவுள் பள்ளியரைக்கு எழுந்தருளுங் காலத்தில் ஓதுவாமூர்த்திகள் தோத் திரஞ்செய்வது வழக்கமாயிருக்கின்றது. அவ்வாறே மற்றையருந் தோத்திரஞ்செய்வர்.

இவ்வாறு பலநூல்களைச் செய்து, பலர்க்குங் கற்பித்திருந்து, நெடுங்காலஞ் சென்றபின்னர் அத்திருநெல்வேலி யென்னுஞ் சிவபுரத்திலே பரிபூரணதசையையடைந்தனர்.

யான் திருநெல்வேலித் தெற்குப் புதுத்தெருவிலிருக்குஞ் சைவசமயவிருத்திப் பிரியராகிய ஸ்ரீ பால்வண்ணமுதலியார் எனப்பெயர்பெற்ற நண்பருடன் திருச்செந்தூருக்குச்சென்று, முருகக் கடவுளைத் தெரிசித்துப் பேரானந்தமுற்று. இத்தேசத்தில் அதிகாரஞ்செய்திருந்து, காசி முதற் கன்னியாகுமரிவரை தொண்ணூற்றாறு சத்திரங் கட்டிவைத்து முருகக்கடவுளின் திருவருளைப்பெற்று வாழ்ந்த மாவைக் குமாரசாமி முதலியார் எனப்பெயர்பெற்ற மகாப்பிரபுவின் சத்திரத்தில் வசித்திருக்கும் நாளில் ஒருநாள், அம்முருகக்கடவுளின் சந்நிதியிலே தேவாரம் ஓதும் பணிசெய்யுஞ் திருப்புகழோதுவாமூர்த்தியெனப் பெயர் பெற்ற மிகுந்த விருத்தாப்பியர் ஒருவர் அங்குவந்து உரையாடியிருக் குஞ் சமயத்தில் இக்கலம்பகத்தில் "எனதே குகன் செந்தில்" என்னுங்கவியைக் கூறினர். யான் இக்கவி யாவராற் செய்யப்பட்ட தென்று பிரியமுற்று வினாவினேன்; அவர் இலக்கணக்கொத்தியற்றிய சுவாமிநாததேசிக மூர்த்தியாற் செய்யப்பட்ட திருச்செந்திற் கலம்பகத்தில் உள்ளது என்று கூறி, உடனே என்னுடைய நண் பரையும் என்னையும் அழைத்துக்கொண்டுபோய்த், தமது மனையி லிருந்த ஏடுகளைச்சோதித்துப், பழைய ஏட்டுப்பிரதி ஒன்றை

யெடுத்து இதனை உலகிற்கு உபகாரமாக வெளியிடவேண்டுமென உதவினர். அதிலே முப்பது தோத்திரச் செய்யுண் மாத்திரம் வேறெடுத்தெழுதி அத்தலத்தார் பலருஞ் சிந்தித்திருக்கின்றனர்.

பின்பு அப்பழைய பிரதியை உற்றுநோக்கி வாசிக்கும் பொழுதில் எழுதுவோரால் இயன்ற பிழைகள் பற்பல இருந்தன, அவற்றையெல்லாம் என் சிற்றறிவிற்கு எட்டியவாறு சீர்திருத்திச் சுத்தப் பிரதியாகச்செய்து வெளியிடலானேன்.

அதிமதுரமாகியுள்ள இக்கலம்பகத்திலே பின்னர்க் குறிக்கப் படுகின்ற முப்பது தோத்திரச் செய்யுட்களையும் தினந்தோறும் பேரன்புடனே தோத்திரஞ் செய்பவர்களுக்குத் திருச்செந்திலம்பதி யில் எழுந்தருளிய முருகக்கடவுள் வேண்டும் வரங்களை அருள்செய்வார். ஆதலாற் சைவசமயிகள் அவ்வாறு தோத்திரஞ் செய்து, இம்மை மறுமைப் பயன்களைப் பெற்று வாழ்வாராகுக!

சுவாமிநாததேசிகர் சரித்திரசங்கிரக முற்றிற்று

இங்ஙனம்
சேற்றூர்ச் சுப்பிரமணியக்
கவிராயர்
சைவநூற் பரிசோதகர்,
மதுரைத் தமிழ்ச்சங்கம்

(இச்சரித்திரம் 1905ல் செந்தமிழ்ப் பிரசுரத்தாரால் பிரசுரிக்கப்பட்டது)



உ

திருச்செந்தூர் ஆண்டவர் துணை

# முன்னுரை

**தெய்வத்துள் தெய்வம் தமிழ்த் தெய்வம் - அத்தெய்வம்**
**தெய்வத்துள் எல்லாம் தலை - முருகு கவி**

*திருச்செந்திற் கலம்பகம் சிற்றிலக்கிய வகையைச் சார்ந்தது. பல்வகைச் செய்யுட்களாலாகிய தொண்ணூற்றாறு வகை பிரபந்தங்களில் ஒன்றாகும். கலம் என்பது பன்னிரண்டையும், பகம் என்பது ஆறு ஆக பொதுவாக பதினெட்டு உறுப்புகளைக் கொண்டதாக இருக்கும் (புயவகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தாழை, ஊசல்). ஆயினும், இருபத்தாறு உறுப்புகள் வரையும் உள்ள நூல்களும் உண்டு. பல பாவினங் களும், சந்தச் செய்யுட்களும் இருப்பினும் நூலின் முற்பகுதியில், ஒரு போகு (மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா), வெண்பா, கட்டளைக் கலித்துறை இவை அமையும். கலம்பக இலக்கியம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு முதல் தோன்றிப் பெருகி வருவதாகக் கூறுவர். அந்தாதித்தொகையால் கலம்பகம் பாடப்பெறும். பெரும் பாலும் தெய்வங்கள் மீதும், அரசர்கள் மீதும், பாடப்படும். தேவர்க்கு ஆயின் குறைந்தது நூறு பாடல்கள் பாடப்பெறும். முனிவர்க்கு தொண்ணூற்றைந்தும் அரசர்க்கு தொண்ணூறும் பாடல்கள் பாடப்பெறும்.. (ஊர் - ஊரிலுள்ள தெய்வத்தைக் குறிக்கும். திருச்செந்திற் கலம்பகம் திருச்செந்தூரில் குடிகொண் டுள்ள செந்தில் முருகனைக் குறித்துப் பாடப்பெற்றது. குமரகுரு பரசுவாமிகள் மதுரை மீனாட்சி அம்மையின் மீது மதுரைக் கலம் பகமும், காசியில் தங்கியிருந்த சமயம் காசிக் கலம்பகமும், அவருடைய சொந்த ஊரான ஸ்ரீவைகுண்டம் கைலாசநாதர் மீது கயிலைக் கலம்பகமும் பாடியுள்ளார். நம்பியாண்டார் நம்பி ஆளு டைய பிள்ளையார் (திருஞான சம்பந்தர்) திருக்கலம்பகம் பாடியுள் ளார். மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை திருச்சி மாவட்டத் தில் உள்ள வாட்போக்கி தலத்திலுள்ள ரத்னகிரீஸ்வரர் மேல் திரு வாட்போக்கி கலம்பகம் படியுள்ளார். முருகனைப்பற்றியும், சிவன்*

பார்வதி குறித்தும், அடியவரான சம்பந்தரைப் பற்றியும் கலம்பகம் பாடியுள்ளனர். தொல்காப்பியத் தேவரால் இயற்றப்பெற்றது திருப்பாதிரிப்புலியூர் கலம்பகம். இரட்டைப் புலவர்கள் திருவா மாத்தூர்க் கலம்பகம் என்ற நூலை இயற்றியுள்ளனர். கலம்பக நூற்களிற் மேலும் சில (கால வரிசையில் தரப்படவிலை) திருவா வடுதுறை அம்பலவாண தேசிகர் கலம்பகம், புள்ளிருக்கு வேளூர் கலம்பகம், திருவரங்கக் கலம்பகம், தில்லைக் கலம்பகம், சிவஞான பாலைய சுவாமிகள் கலம்பகம், திருப்பேரைக் கலம்பகம், திருப் பாதிரிப்புலியூர்க் கலம்பகம் திருக்கலம்பகம் (சமண நூல்), கச்சிக் கலம்பகம், மயூரகிரிக் கலம்பகம், திருவேங்கடக் கலம்பகம், நந்திக் கலம்பகம், ஸ்ரீவரமங்கைக் கலம்பகம், அருணைக் கலம்பகம் திருக் காவலூர்க் கலம்பகம் (வீரமாமுனிவர்) முதலியவை. கலம்பகங்கள் கவிதைச் சுவையில் சிறந்தவை. கலம்பகத்துக்கு இரட்டையர் என இரட்டைப் புலவர்கள் இச்சிற்றிலக்கியம் இயற்றுவதில் வல்லவர் என்பர். "கலம்பகம் பாடிக் காப்பியம் பாடு" என்பதாலும் இதன் சிறப்பு வலியுறுத்தப்படுகிறது. கலம்பக நூல் "விருந்து" எனப்படும் வனப்பு உடையது என்பர்.

ராவ்பகதூர் தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் தமது "முருகவேள் பன்னிரு திருமுறை" என்ற நூலில் சேய்த்தொண்டர் தொகை என்ற தலைப்பில் இந்நூலாசிரியர் சாமிநாத தேசிகரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளதாவது: "நாவலர் தம் மாமணி சின்னப்பர்க்குஞ் ......... சாமிநாதர்க்கும் அடியேன்", இவர் திருச்செந்தூர்க் கலம்பகம் பாடினவர் பதினேழாம் நூற் றாண்டினர்; கல்லாட உரையாசிரியராம் மயிலேறும் பெருமாள் பிள்ளையிடம் தமிழும் கனக சபாபதி சிவாச்சாரியரிடம் வட மொழியும் கற்றவர். திருவாவடுதுறை ஆதீனத்தில் நிருவாண தீக்ஷை பெற்றவர்; துறவி; வைத்தியநாத தேசிகரின் காலத்தவர். தொல் காப்பியம் முதலிய நூல்களை எழுத்தெண்ணிப்படித்தவர். திரு நெல்வேலி ஈசான மடத்தில் இருந்தவர். ஈசான தேசிகர் என்பது இவரது அபிஷேகச் சிறப்புப்பெயர். இவர் 'இலக்கணக்கொத்து' என்னும் நூலும் அதன் உரையும் எழுதினவர். இவருடைய மாணவர் நன்னூலுக்கு உரை எழுதிய சங்கர நமச்சிவாயப்புலவர். 'முருகக்கடவுள் மீது வைத்த பேரன்பினால் இவர் திருச்செந்தூர்க் கலம்பகம்' என்னும் நூலைப்பாடி முருக பிரானது சந்நிதியில் அரங்கேற்றுவித்தனர்.

அன்றுமுதல் இக்கலம்பகத்தின் முப்பது தோத்திரச்செய்யுள் வேறெடுத்து முருகக்கடவுள் பள்ளியறைக்கு எழுந்தருளுங் காலத்

தில் ஓதுவா மூர்த்திகள் தோத்திரம் செய்வது வழக்கமாயிருக்கின்றது' - என்று 1905 அச்சேறிய கலம்பகத்து முன்னுரையிற் கண்டிருக்கிறது.

அதேபோன்று பதினோராந் திருமுறையில் சுவாமிநாத தேசிகர் இயற்றிய செந்திற் கலம்பகத்தை இணைத்து "புயம் ஆறிரண்டுக்கும்.........." என்று தொடங்கும் பாடலையும் சேர்த்துள்ளார். இந்நூல் பதிப்பிக்கப்பட்ட ஆண்டு குறிப்பிடப்படவில்லை எனினும் இவ்வாசிரியரின் பிறிதொரு நூலில் பதிப்பாண்டு 1947 என்றுள்ளது. ஆகையால் இந்நூல் அதற்கு முன்பானதாக இருக்க வேண்டும். ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு என்று கொள்ளலாம்.

முருகனின் திருவருளால் நூறு ஆண்டுகளுக்கு முன்பு 1905 செந்தமிழ்ப் பிரசுரத்தாரால் பதிப்பிக்கப்பட்ட "திருச்செந்திற் கலம்பகம்" கொண்ட பழைய புத்தகம் ஒன்று எனது நண்பரும் குமரன் குன்றம் திருப்புகழ் மன்றத் தலைவருமான திருR. உபேந்திரன் மூலம் (பதிப்பிக்கப்பட்ட நூறு ஆண்டுகளுக்குப் பிறகு) 2007ல் கிடைக்கப்பெற்றது.

தினசரி முப்பது பாடல்களை, திருச்செந்தூர் முருகன் கோயிலில் ஆண்டவர் பள்ளியறைக்கு எழுந்தருளுங் காலத்தில் ஓதுவாமூர்த்திகள் தோத்திரம் செய்வது வழக்கமாயிருக்கின்றது என்று அந்நூலில் குறிப்பிட்டிருந்தது. தினசரி பாராயணம் செய்யும் விதமாக அந்நூலைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டேன். என் எண்ணம் நிறைவேறவில்லை. ஆகையால் எங்களுடைய மன்றமான குமரன் குன்றம் திருப்புகழ் மன்றத்தின் சார்பில் வெளியிட்டால் முருகனடியார்கள் பாராயணம் செய்ய ஏதுவாக இருக்கும் என்று கருதி இந்நூல் வெளியிடப் பெறுகிறது.

"திருக்கயிலை போன்ற புனிதமான செந்தில் பதி" என்று அருணகிரிநாதர் திருப்புகழில் திருச்செந்தூரைப் போற்றிப்பாடியுள்ளார். முருகப்பெருமான் தேவர்களை, சூரபன்மனின் கொடுமைகளிலிருந்து காக்கும் பொருட்டு தனது படைகளுடன் தங்கிப் போர் புரிந்த இடம்; ஆறுபடை வீடுகளில் இரண்டாவது; திருநெல்வேலியிலிருந்து அறுபது கிலோமீட்டர் தொலைவில் வங்காள விரிகுடா கடற் கரையில் அமைந்துள்ளது. திருச்சீரலைவாய் என்று மற்றொரு பெயர். வியாழ பகவானால் பூஜிக்கப்பட்ட காரணத்தால் வியாழ கேந்திரமாகக் கருதப்படுகிறது. 'சிக்கலில் வேல் வாங்கி, செந்தூரில் சூர சம்ஹாரம்' என்ற முதுமொழிக்கேற்ப சூரசம்ஹாரப் பெருவிழா இங்கு சிறப்பாக நடைபெற்று வருகின்றது. மூலவர் பாலசுப்ரமணியர். சூரசம்ஹாரம் முடிந்த பின்னர் சிவ

பூஜை புரிந்துள்ளதைக் குறிக்கும் வகையில் தன்னுடைய நான்கு திருக்கரங்களில் இரண்டு அபய வரத ஹஸ்தங்களாகவும், ஒன்றில் ருத்ராக்ஷ மாலையையும் மற்றொரு திருக்கரத்தில் புஷ்பமேந்தி அர்ச்சனை செய்யும் திருக்கோலத்திலும் காட்சி தருகின்றார். முருகப்பெருமானின் இடது புறத்தில் சிவலிங்கம் உள்ளது. மூலவருக்குப் பின்னால் உள்ள அறையில் முருகப் பெருமான் வழிபட்ட ஐந்து லிங்கங்கள் உள்ளன.

அருணகிரிநாதர் எண்பத்து நான்கு திருப்புகழ் பாடல்கள், ஆதிசங்கரர் சுப்ரமணிய புஜங்கம், பகழிக்கூத்தர் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ், குமரகுருபரர் கந்தர் கலிவெண்பா மற்றும் வென்றிமாலைக் கவிராயர் திருச்செந்தூர்த் தல புராணமும் இயற்றியுள்ளனர். இத்தலம் மேலும் பல சிறப்புகளைக் கொண்டதாகும்.

இந்நூலுக்கு மிகவும் சிறப்பாக சுருக்கமாக அனைத்துப் பாடல்களுக்கும் தெளிவுரை எழுதியுள்ள ஐயா 'அருணகிரி தாசன்' 'திருப்புகழ்ச் செம்மல்' திருப்புகழ்ச்செம்மணி பிரவசன திலகம்' பேராசிரியர் டாக்டர் ம. ராமகிருஷ்ணன், அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

முதலில் தினசரி தோத்திரம் செய்துவந்த முப்பது பாடல்களை மட்டும் வெளியிடுவதென்று தீர்மானித்து அதற்கு அணிந்துரை வழங்கித் தருமாறு 'திருப்புகழ்த் தல ஆராய்ச்சித் திலகம்' 'திருப்புகழ் அமுதன்' 'திருப்புகழ் சீர் பரவுவார்' வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன் அவர்களை அணுகியபோது அவர் பாடல்கள் முழுவதையும் தெளிவுரையுடன் வெளியிடுமாறும், தெளிவுரை எழுதித்தர டாக்டர். ராமகிருஷ்ணனை அணுகுமாறும் அறிவுரை கூறினார். அதை ஏற்று அனைத்துப் பாடல்களும் தெளிவுரையுடன் முழுமையாக அழகிய நூலாக இன்று வெளியிடப்படுகிறது. திரு. வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன் அவர்களுக்கு எங்கள் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

எப்பொழுதும் திருப்புகழ் மன்றத்தினருக்கு உறு துணையாக இருக்கும் ஸ்ரீ பாலசுப்ரமண்ய ஸ்வாமி சத்சங்கத் தலைவர் லயன். C.R. நரசிம்மன், திருக்கோயில் தக்கார் திரு. K. ராமச்சந்திரன் மற்றும் எங்களுடைய பதிப்பை அதிக அளவில் வாங்கி கந்த ஷஷ்டி விழாவைச் சிறப்பாக நடத்த உதவி செய்தவர்களுக்கு வினியோகித்துவரும் இளைஞர் திரு. S. கந்தவேல், செயலர், ஸ்ரீ பாரதீய கலாசார சேவாசமிதி அவர்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

இந்நூலைக் குறித்த நேரத்தில் சிறப்பாகத் தயாரித்துத் தந்த ஜெகத்குரு ஆசிரியர் திரு. கல்யாண்ஜி அவர்களுக்கும், அழகிய முறையில் அச்சிட்டு வெளிவர உதவிய சேம்பியன் பவர் பிரிண்டர்ஸ் அவர்களுக்கும் எங்களது பாராட்டுக்கள். மேலும் இந்நூல் வெளிவர உதவிய குமரன் குன்றம் திருப்புகழ் மன்றம் தலைவர் R. உபேந்திரன், செயலர் S. சண்முகம் மன்ற உறுப்பினர் கள், எனது நண்பர் டாக்டர் S. சுந்தரம் மற்றும் அன்பர்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக. திருப்புகழ் அடியார்களுடன் எங்களைச் சேர்த்து வைத்த எங்கள் ஆசான், எப்பொழுதும் செந்திலாண்ட வனையே வணங்கி வந்த திருப்புகழ் வித்தகர், இம்மன்ற நிறுவனர் திருப்புகழ் சதுரர் அமரர் ஆ. ரா. பாலசுப்ரமணியன், அவர்களை இந்நேரத்தில் நினைவு கூர்ந்து அவர் ஆசியை வேண்டும் அவரது மாணவர்கள்.

*13-04-2008* தொகுப்பு
சென்னை *600044* மருத்துவர் கைலாசம் சுப்ரமணியம்



# அணிந்துரை

**செந்திலும் எனதுஇரு கண்களும்**
**அடியவர் சிந்தையும் அருமறைநூல்**
**அந்தமும் மகிழ்வொடு சந்ததம் உலவிய அம்பிகை திருமகனே (47)**

'செஞ்சொற் புலவர்க்கு அன்புற்ற திருச்செந்திற் குமரப் பெருமாளே' என்று அருணை வள்ளல் புகழும்படியான செந்தமிழ் புலவர்கள் செந்திற் கந்தனை இன்புற்றுப் பாடிப் பரவிய எத்தனையோ அருட்பனுவல்கள் உள்ளன. அப்பாமாலைகளில் ஒப்பற்ற ஒரு அருட்பிரபந்தம் "திருச்செந்திற் கலம்பகம்" என்னும் தெய்வம் மணக்கும் கதம்பமாலையாகும். தெய்வத் தமிழ் மொழியில் பலவிதமான பாவகைகளைக் கொண்டு தொடுக்கப் பெற்றது இந்த ஒப்பற்ற பிரபந்தம். கற்பவர் மனத்தைக்கவரும் செஞ்சொற்களும், செம்பொருளும், பலசந்த நயங்களும் அமைந்த பத்திச்சுவை பழுத்துத் தித்திக்கப் பெறும் கற்பகம் போன்றது திருச்செந்திற்கலம்பகம்.

நூலாசிரியர் துறைசை என்னும் திருவாவடுதுறைச் சுவாமி நாத தேசிகர், பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். திருநெல் வேலியில் ஈசான தேசிகர் என்ற திருநாமத்தோடு ஆதினகுரு பீடத்தில் அமர்ந்து அருட்பணிகளைச் செய்தவர். திருத்தொண்டர் புராணத்தில் அறுபத்து மூன்று சிவனடியார்களின் பெருமை களைக் கூறுவதுபோல, சிவகுமாரன் அடியார்களாகிய சேய்த் தொண்டர் புராணத்தில் போற்றப் பெறும் குகன் அடியார்களில் இந்தச் சுவாமி நாத தேசிகரும் ஒருவராவர்.

செந்திற் கந்தன் மீது இவர் கொண்டுள்ள பக்தியும் அடிமைத் திறமும் இந்நூலைப் படித்து இன்புறும்போது உணரலாம். திருச் செந்தூர் முருகனைத் துதிப்பதே தமக்குரிய பணியாகும் என்பதை

**"எனதே குகன் செந்திலேத்து தொழில் அன்னோன்**
**தனதே எனை ஆளும் தன்மை....." (2)**

என்ற நூலின் தொடக்கத்திலேயே காட்டுகிறார். இதைப் படிக்கும்போது

**"தன்கடன் அடியேனையும் தாங்குதல்**
**என்கடன் பணிசெய்து கிடப்பதே"**

*என்னும் திருநாவுக்கரசு பெருமானது தேவாரப்பாடல் நம்மை சிந்திக்க வைக்கின்றது.*

*தேசிகர் அவர்கள் செந்தூர்க் கந்தன் மீது எவ்வளவு உறுதி யான பக்தியும் ஆழமான அன்பும் கொண்டிருந்தார் என்பதை பல பாடல்களில் நாம் கண்டின்புற முடிகிறது. செந்தூர்க் குகனை வணங்கித் தொழாதவர்கள்*

**"தொழு திரந்து வெம்பசியாற் சோர்ந்திடுவார் கைபார்த்து**
**அழு தலமந் தேங்கி அலைவார்......." (வெண்பா - 19)**

*என்கிறார். அருணகிரியாரின் கந்தரலங்காரப் பாடல் இங்கே நம் நினைவில் வருகின்றது.*

**"வேடிச்சி கொங்கை விரும்பும் குமரனை, மெய் அன்பினால்,**
**பாடிக் கசிந்து, உள்ளபோதே கொடாதவர், பாதகத்தால்**
**தேடி, புதைத்து, திருட்டில் கொடுத்து, திகைத்து, இளைத்து**
**வாடி, கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே" (53)**

*திருச்செந்தூர் முருகனை இடைவிடாது தியானிப்பவர்கள்*

*"கொள்ளார் பவப்பிணி கூற்றுக்கஞ்சார்... பிணியின் நலிவு படார்...." (3) என்ற வரிகள் "சலம் காணும் வேந்தர் தமக்கஞ்சார்; யமன் சண்டைக்கஞ்சார்; துலங்கா நரகக்குழி அணுகார்; துட்ட நோய் அணுகார்...." என்னும் கந்தரலங்காரச் செய்யுளோடு (101) ஒப்பிடத்தக்கது. இதைப்போல இன்னும் பல பாடல்களில் அருளாளர்களது சொற்கள் நம்மை படித்து இன்புற்று சிந்திக்க வைக்கின்றன.*

**"புய மாறிரண்டும் பொன் அணியாம் புள்ளிமான் மகட்குங்**
**கயமான் மகளுக்கும் கண் இணையாம் கடுங்கூற்று வந்தால்**
**நயமான தொண்டர்க்கு நற்றுணையாம் செந்தில் நன்னகர்மே**
**வியமான் மருகன் திருக்கரத் தேந்திய வேற்படையே" (8)**

*என்ற பாடல் வேலின் சிறப்பைக் கூறுகிறது. அருணகிரி நாதரின் வேல் வகுப்பில் உள்ள பல செய்திகள் "... மறச்சிறுமி விழிக்கு நிகராகும்..." "எனக்கொர் துணையாகும்" போன்றவை இதனோடு ஒப்பிடலாம்.*

*பிழை புரியாத அடியார்கள் காட்டும் அன்பு சிறிதளவே என்றாலும் அதனைப் பெரிதாகக் கருதி உள்ளம் மகிழும் முருக வேள் அருளும் திருச்செந்தூர் (ஆசிரிய வண்ணவிருத்தம் - 22) என்ற கருணைத்திறம்; சிவனும் திருமாலும் வேற்படையானும் திருச்செந்தூர் இருப்பவர்கள் (35) என்று ஒன்றாகக் காணும்*

*காட்சி அனுபவம்; திருச்செந்தூர்க் கற்பகமே! என் வினைகளை அழிப்பதற்கு உன்னுடைய அருட்கண் ஒன்றே போதாதோ? ஆறுமுகம் எதற்கு? பன்னிரு கண்கள் எதற்கு? (78 - வெண்பா) என்று கந்தனிடம் கேட்கும் இரக்கம்; ஊஞ்சலாட்டம் போல போவதும் வருவதுமான பிறப்பு இறப்பு எனும் உடற்சுமை என்ற அற்பமான சிறு வீட்டில் அநித்யமான வாழ்வில் உழன்றுபட்டு இறந்து இறந்து அழிந்து போவேனோ! (ஆசிரிய விருத்தம் - 40) என்ற வேதனை; முயற்சி செய்பவர்கள் எண்ணத்தை நன்குணர்ந்த திருச்செந்தில்வேலன் அனைத்தையும் அருள்வான். அவன் கொடுக்கவில்லையெனில் வேறுஎந்தத் தேவரும் அதைத் தருவதற்கு வல்லவர் அல்லர் (கலித்தாழிசை - 49) என்னும் அற்புத மான உறுதி போன்ற பல சுவைகளை இந்நூலில் ரசித்து இன்புற முடிகிறது. சிவனார் மைந்தனாகிய குமரன் திருப்பரங்குன்றத் திலும் திருச்செந்திலிலும் வாழ்பவன். அங்குள்ள தலைவியின் அழகை வியந்து கூறும் பாடல் மிக அழகு.*

*“...... அன்னார் குலவாழை இளமென்றுடையால், நடையால், இடையால், விழிவேற் கடையால், நின்றுடையால் நிற்பரால் எவரேனும் நிலைகுலைந்தே” (தலைவியை வியத்தல் - கலித்துறை - 28)*

*இதைப்போல “குலுங்கு” என்ற சொல் பத்துமுறை பயின்று வரும் பாடலைப் படிக்கும்போது நமது நெஞ்சமும் குலுங்கி மகிழும் அனுபவம் ஏற்படுகின்றது.*

**“குலை குலுங்கு.....**

**..............................................................**

**முலை குலுங்கு மாகின்மாரன் முடிகுலுக்கும் அமுதவாய்**
**மொழி குலுங்கு மாகில்ஆவி பழிகுலுங்கும் அல்குலங்**
**கலை குலுங்கு மாகில்நாடு நிலைகுலுங்கு மாம்முகக்**
**கஞ்சமும் குலுங்குமாகில் என்நெஞ்சமும் குலுங்குமே**
**(மதங்கியார் கலித்தாழிசை - 29**

*“மயிலும் சேவற்கொடியும் பன்னிரு ரத்னக் குழைகளும், ஆறு திருமுகங்களும், வெற்றிவேலும் குளிர்ந்த கடப்ப மலரும், தண்டை அணிந்த திருவடியும் என் கண்களைவிட்டு அகல மாட்டா” (கலித்துறை - 88) என்ற பாடல் வரிகள் அருணகிரிநாத சுவாமிகளின் திருச்செந்தூர் திருப்புகழான “தண்டையணி வெண்டையம்....” பாடலின் “கண்களும் முகங்களும் சந்திர நிறங் களும் கண்குளிர எந்தன்முன் சந்தியாவோ” என்ற அவருடைய அருள் அனுபவத்தோடு நினைத்துப் பார்த்து இன்புற முடிகிறது.*

"நின் தண்டையம்தாள் சூடாத சென்னியும், நாடாத கண்ணும், தொழாதகையும், பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத் தனனே!" என்னும் (கோடாத- 76) கந்தரலங்காரப் பாடல் "பாடாத நாவும் பணியாத சென்னியும் பாவித்தன்பாய் நாடாத உள்ளமும் நான் படைத்தான்..." (கலித்துறை - 84) என்ற பாடல் பொருளை அப்படியே படம்பிடித்துள்ளது போல அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

திருச்செந்தில் வேலனுக்கு என்னுடைய அற்பமான சொற்கள் மிகப்பெருமை வாய்ந்த நக்கீரர் பாடிய திருமுருகாற்றுபடை யாகுமோ? என்று இரங்கி வேண்டுகிறார் தேசிகர். இப்பிரபந்தத் தில் ஒவ்வொரு செய்யுளும் தித்திக்கும்; கருத்தாழமும் சொல் அமைதியும் சிந்தனைக்கு விருந்தாகும். "முருகனைத் தொழுது ஏழ்வகைப் பிறப்பிலும் பிறந்து உழலாமே இருக்க நெஞ்சமே! நீ திருச்செந்தூர் சென்று முருகனைத் தொழுது வேலும் மயிலும் துணை என்று சொல்" என்று நெஞ்சிற்கு அறிவுறுத்தி இந்நூலை நிறைவு செய்கிறார் சுவாமிநாத தேசிகர் அவர்கள்.

ஏறக்குறைய 60 ஆண்டுகளுக்கு மேலாக அச்சில் வராத இந்த அற்புதப் பாமாலை நூலை அச்சு வாகனம் ஏற்றி, ஆறுமுக அடியார்கள் படித்து ஓதி இன்புற வழி செய்துள்ளவர்கள் போற்றுதலுக்குரிய "குமரன் குன்றம் திருப்புகழ் மன்றத்தினர்." இருபத்தெட்டு ஆண்டுகளுக்குமுன் சென்னை குரோம்பேட்டை யில் 'திருப்புகழ்ச் சதுரர்' 'திருப்புகழ் ஞானச் செல்வர்' திரு. ஆ. ரா. பாலசுப்ரமண்யன் அவர்களால் தொடங்கப் பெற்றது இம் மன்றம். குமரன் குன்றம் முருகப் பெருமானுக்கு ஆண்டுதோறும் தமிழ்ப்புத்தாண்டு நன்னாளன்று திருப்புகழ்த் திருப்படிவிழா வுடன் பல அருள்விழாக்களை நடத்திவந்தவர் அப்பேரருளாளர். அவரது அடிச்சுவட்டைப் பின்பற்றி தற்போது திரு. ஆர். உபேந் திரன் அவர்களைத் தலைவராகவும், புலவர் திரு. சாமிகுருநாதன் லயன் திரு. சி.ஆர். நரசிம்மன் அவர்களை உபதலைவர்களாகவும் திரு.சு. சண்முகம் அவர்களை செயலாளராகவும் மருத்துவர் திரு. கைலாசம் சுப்ரமண்யம் அவர்களைப் பொருளாளராகவும் கொண்டு இம்மன்றம் பல ஆன்மிகப் பணிகளை நடத்தி வரு கின்றது பாராட்டுதற்குரியது.

"முருகுகவி அறப்பணி திருப்புகழ் ஆராய்ச்சி மையம்" என்ற அமைப்பைத் தொடங்கி இம்மன்றத்தினர் அமரர் ஆ.ரா.பா. அவர்கள் விட்டுச் சென்ற பல இலக்கிய பணிகளைத் திட்டமிட்டு செயலாற்றி வருவது பெருமைக்குரியது. அம்முறையில் இந்த



ஸ்ரீ சித்தி விநாயகர்



ஸ்ரீ சுந்தரேஸ்வரர்



ஸ்ரீ மீனாக்ஷி

*ஆண்டு "திருச்செந்திற் கலம்பகம்" நூல் உரையுடன் தமிழ்ப் புத்தாண்டு திருப்புகழ் திருப்படி விழாவன்று வெளிவருகின்றது. உரையின்றி இந்நூலைப் படித்து பொருள் காண்பது மிகவும் கடினம். திருப்புகழை ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்ற வரும் பல அரிய ஆய்வு நூல்களை எழுதியுள்ளவருமான 'திருப் புகழ்ச் செம்மணி' 'அருணகிரிதாசன்' குகத்திரு ம. ராமகிருஷ்ணன் அவர்களது மிக அழகான தெளிவுரை இந்நூலைப் படித்து இன்புற வகை செய்கிறது. இவ்வரிய நூலை வெளிக் கொண்டுவர "திருப் புகழ் ஆர்வலர்" மருத்துவர் கை. சுப்ரமண்யம் அவர்கள் மேற் கொண்ட முயற்சியும் உழைப்பும் ஆர்வமும் ஊக்கமும் போற்றி பாராட்டுதற்குரியது. "முருகுகவி அறப்பணி திருப்புகழ் ஆராய்ச்சி மையத்தின் மூலம் ஆண்டுதோறும் இதைப்போன்ற அரிய பெருமை வாய்ந்த இலக்கியங்களைப் பதிப்பித்து, உலகெங்கும் முருகப்பெருமான் புகழைப் பரப்ப வேண்டி செந்திற்கந்தன் திருவருளைப் போற்றி வாழ்த்துகிறேன்.*

"ஒழிந்தன துன்பம் உவந்தன உள்ளம்
இழிந்தன நம்வினை யெல்லாம் - செழும்புனற்
சேந்தன் திருச்செந்திற் சேர்ந்து" - (சிந்தியல் வெண்பா - 45)

"தம்பிரான் செந்திலிற் சரவணத் துதித்தோன்
அம்பொனார் கழலிணை அன்புறப் பணிந்தோர்
உம்பராய் மன்னுவர் உயர்நிலை அடைந்தே"
(ஆசிரியத்தாழிசை - 74)

வாழ்க சீர் அடியார் எல்லாம்

முருகாசரணம்

52(2) முத்தையா இரண்டாவது தெரு
ராயப்பேட்டை,
சென்னை - 600 014.
போன்: 2847 4468

'திருப்புகழ் அமுதன்'
வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன்
செயலர், திருப்புகழ்ச்சங்கமம்
31-3-2008

கணபதி துணை

## திருச்செந்திற் கலம்பகம்

### சுவாமிநாத தேசிகர் இயற்றியது

பாயிரம்

மதிக்கும் பருதிக் கடவுளுக்கும் வழங்கும் விழியானருண் மதலைக்
கிதக்கும் படக்குங் கலம்பகப் பாவிசைக்குந் தமிழாலினி திசைத்தான்
புதுக்குந் தமிழ்த்தென் கடல்கடக்கப் பொருந்துந் தோணிபோ லியல்செய்
துதிக்குந் தமிழார் துறைசை நகர்ச் சுவாமிநாத தேசிகனே.

விநாயக வணக்கம்

நிலம்பக வீழ்சடை நீறணி வான்மைந்தன் நீடயிலோன்
கலம்பகஞ் செந்தமிழ்ப் பாமாலை யாற்செந்திற் கண்மருவு
சிலம்பக மெல்லடி வல்லபை கேள்வனைத் திங்கள்வெண்கோட்டு
இலம்பக யானை முகத்தானை வாழ்த்தி இயம்புவனே.

## நூல்

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

நாலடித்தரவு

சொல்வாய்மை தருங்கடவுட் சுருதிகரு தியபொருளைப்
பல்சான்ற பெருங்கேள்விப் பனிமலய முனிவினவ
அம்புயனு மறியாத அறமுதலாந் தமிழ்மூன்றுஞ்
சம்புவமன் றுடனுணரத் தருவோய்நீ முருகோனே
கண்சுருங்க விரித்தபசுங் கலவமயி லெனத்திருமுன்
மண்சுருங்க விரித்தகுண மணியாழி யெழுபரித்தேர்
அந்தினக ரனைத்தடுக்கும் அணிமணிமா ளிகைப்புரிசைச்
செந்திநகர்ச் சினகரத்துத் திருத்தகவீற் றிருந்தனையால்.

ஈரடித்தாழிசை

ஊனாகி உயிராகி உணர்வாகி உணர்வுதவும்
கோனாகி வினையளவுங் குணத்தளவுந் தனக்களவாய்
விரவாதி யந்தமிலா வெளியாகித் தெளியாது
பரவாதி யருமுலவாப் பாமறையுந் தாமறைய
வாக்குமன முங்கடந்து மண்ணொடுவிண் ணிடத்தியற்றும்
போக்குவர வொழிந்துவிழிப் புலத்துருவும் அருவமுமாய்

வேதாந்தஞ் சித்தாந்தம் விளங்குகலாந் தந்தெளிந்த
போதாந்த நாதாந்தப் புறத்தினுமப் புறம்போகி
உணர்ந்தாரும் உணராரும் உணராம லுயிர்க்குயிராய்ப்
புணர்ந்தாலும் ஆறாறு புலன்நலமுங் கலவாது
நின்றதனிப் பரம்பொருளாம் நினக்கொருபேர் இலையெனினும்
இன்றுகுக னெனப்பெறுவ திளையோய்நின் விளையாட்டே.

ஓரடி அராகம்

அருமறை முறையிட அறைகழல் பறையிட அடியருள் நினைவதுன்னடி
ஒருமையினிருமையு முதவிய மதியென ஒளியொடு குளிர்வதுன்முகம்
வருமுலை வனிதைய ரிருவரும் மயிலினம் மழையென விழைவதுன்னெழில்
பெருகலை கெழுகலி கடலினும் எழுமடி பெருகுவ துருகுநின்னருள்.

பெயர்த்தும் - ஈரடித்தாழிசை

தாயென்றுந் தந்தையென்றுஞ் சகமீன்று தருமுனக்குச்
சேயென்று பின்னுமொரு திருநாமம் வருமாறென்?
முந்திலென்றே யடியருள முளரிதொறும் இருந்தாய்க்குச்
செந்திலென்றே யுரைக்குமொரு திருப்பதியும் விருப்புளதே!
அயிலேற்று வருங்காலம் அல்லாநீ கொல்லாயோ
மயிலேற்றம் ஏனுனக்கு மற்றேற்றம் பெற்றிலையோ!
ஓராறு பனிமதியி னொடுபவள வரையினிரைத்(து)
ஈராறு தினகரரு மிடையிடையே யுதித்தாங்கு
கருணைபொழி திருமுகமுங் கணமணிக்குண் டலநிரையுந்
திருநெடுந்தோள் களுங்கமலச் சேவடியுந் தூவடிவும்
பாடாது நினையாது பரவாத எனக்குவினை
கூடாத தொண்டரொடுங் கூட்டியுநீ காட்டினையால்.

நாற்சீரடி அம்போதரங்கம்

பிறந்ததும் இறந்ததும் பெரும நின்புகழ்
மறந்ததும் அல்லது வணங்கி லேநினைக்
காமமும் வெகுளியுங் களிமயக்கமுந்
தாமிடை கலந்தெனைத் தலைம யக்கலால்.

நாற்சீரடி அம்போதரங்கம்

உண்பதும் உடுப்பதும் உவந்து தேடினேன்
கண்படை நனவினிற் கலங்கி வாடினேன்
உய்திறம் இதுவென வுணர்வு போயினேன்
செய்திறம் இதுவெனும் தெரிவில் பேயினேன்.

முச்சீரடி அம்போதரங்கம்

எவ்வா றெனைஉய் யக்கொள்வாய்
எழுதா மறையின் திறத்துள்ளாய்
செவ்வான் அனையான் திருப்பிள்ளாய்
தெரியா தினியுன் செயல்வில்ளாய்.

இருசீரடி அம்போதரங்கம்

மெய்யுநீஇ, பொய்யுநீஇ, விண்ணுநீஇ, மண்ணுநீஇ
ஐயைநீஇ, செய்யைநீஇ, ஆதிநீஇ, சோதிநீஇ.

தனிச்சொல்

எனவாங்கு

ஆறடி நேரிசையாசிரியப்பா - சுரிதகம்

நீயல தில்லை யாவையு ம்உலகம்
மற்றவற் றிடையான்அவத்துடற் பொறையொடு
கறங்கெனத் திரியாது பிறங்குசுற வெறியும்
நந்தூர் கடற்றுறைச் செந்தூர் பரவுவன்
காமரு பூந்தொடைக் கடம்பநின்
தாமரை மலரடி தருகுமா வெனவே. 1

வெண்பா

★ எனதே குகன்செந்தில் ஏத்துதொழில் அன்னோன்
தனதே எனையாளுந் தன்மை - வினவின்
மறத்திமணா என்புமுதல் வாழ்வையெலாம் நெஞ்சே
குறத்திமணா என்புகழே கொள். 2

கலித்துறை

★ கொள்ளார் பவப்பிணி கூற்றுக்கஞ் சாரன்பர் கூட்டமல்லால்
நள்ளார் பிணியி னலிவு படார்தெய்வ நாளுமற்றொன்(று)
உள்ளார் முருகன்செந் தூர்பிரி யாதவ ணொண்கமலக்
கள்ளார் விரைமலர்ந் தண்டையந் தாள்தொழக் கற்றவரே. 3

ஆசிரியவிருத்தம்

★ கற்றாலும் நீடுழி கழித்தாலும் கழியாத கரையில் வாழ்வு
பெற்றாலும் முருகனடிக் கன்புபெறா தவருலகிற் பிறவிதீரார்
இற்றாலுங் கலிநலிய இரந்தாலும் பேதையராய் எழுத்தாறுள்ளத்து
அற்றாலும் அவனிருக்குஞ் செந்திலென்றார் முந்திலென்றும்
அடைவர்தாமே. 4

ஆசிரியப்பா

தாமரை பயின்ற நான்முகக் கடவுள்
எழுதா மறைப்பொருட் பழுதாங் குரைப்ப
வீங்குமணிக் கடகத் தாங்குதிணி தடக்கை
முன்வருத் தியவா றின்னமும் வருத்த
விரும்பிய தால்எனத் திரும்பிட நஞ்சேய்
பாயிருள் பருகும் பல்கதிர்க் குழவி
ஞாயிறுசுற வெறி நாண்முரி திரைமுகட்(டு)
எழுவது போல மழைதழை கலாபச்
செறிமயிர்ச் சிறையார் பொறிமயிற் புறத்துச்
சேயொளிமேனி திகழஉங்கெழுந்தனை
தெய்வவான் கருணியு மொய்வரை அருணியுந்
தூவலங் கயிலும் சேவலங் கொடியு
ஆறு முகமும் நீறணி புயங்களும்
பண்டைய மறைபுகழ் தண்டையந் தாள்களும்
கந்தநின் நாமமும் செந்திலம் பதியும்
வணங்கவும் நினைக்கவும் வாழ்த்தவும்
இணங்கலிற் பரவினேன் எனைவிதித் ததற்கே. 5

வெண்பா

அதற்கிதற் கென்றுள் அவம்போக்கி ஆக்கம்
முதற்பொருட்கு மின்றி முயன்றாம் - நுதற்கணவன்
சந்ததியா னஞ் செய்யான் தானுவந்து செந்தினகர்
வந்ததியா னஞ்செய்யாமல். 6

புயவகுப்பு - ஆசிரிய வண்ண விருத்தம்

★ மலர்தலை ஞாலத் தலகில வாமுற் றுயிர்களு முந்திக் கண்பண்டு தந்தன
மறைபகர்வாய்மைத் திசைமுக நோவுற்றிடுமுறை தண்டித் தன்றங்கை
கன்றின
மகபதி வானத் தரசுவ ழாமற் றிருமுடி யன்பிற் கொண்டும்பு னைந்தன
வழிபடு கீரற் கழிசிறை தீரப் பரிவொடு முந்திச் சென்றஞ்ச லென்றன
குலமடமான் மெய்ப்புதல்வியும் யானைக்குமரியு மொன்றொத்
தின்பங்க வர்ந்தன
குழையுமென் வாய்மைத் தமிழுநல் நீபத் தொடையலு மொண்பொற்
சந்துந்த தவழ்ந்தன
குரைகழ னாடித் தொழுநெறி சேர்கொத் தடியவர் தங்கள் துன்பங்க
ளைந்தன
குவிமுகை வேலைக் கவிழிணர் மாவைத் தடிதலு மன்றிக் குன்றும்
பிளந்தன

உலகுண ராமுத் தமிழுணர் நீதிக் குறுமுனி வந்தித் தென்றும்பு கழ்ந்தன
உலைமலி வாகைத் திருநெடு வேலிற் சிரமவி தங்கட் கங்கங் கியைந்தன
உமைமுலை பீர்விட் டொழுகிய பாலுக் கழுதுயர் பொன்றக் கொண்டங்
கணுந்தின
உருகெழுகோலத் திருமுது சூரைக்கிளையொடு மஞ்சக் கொன்றங்கம்
வென்றன
கலவம யூரத் துரகத மேறிப் புவனியு மெண்டிக் கெங்குந் திரிந்தன
ககனவ ளாகத் தளவிய கோழிக் கொடிவளர் கம்பத் தம்பம்பொ ருந்தின
கலைமதி போலத் திருமுக நீள்கட் கடையருள் பொங்கிச் சிந்துந்தி பம்பின
கடலலைவாய் முத்தினவளை வீசிக்கரை பொரு செந்திற் கந்தன் புயங்களே.
7

கலித்துறை

★ புயமா றிரண்டுக்கும் பொன்னணி யாம்புள்ளி மான்மகட்குங்
கயமான் மகளுக்குங் கண்ணிணை யாங்கடுங் கூற்றுவந்தால்
நயமாய தொண்டர்க்கு நற்றுணை யாஞ்செந்தில் நன்னகர்மே
வியமான் மருகன் திருக்கரத் தேந்திய வேற்படையே 8

கலிவிருத்தம்

★ படைக்கணார் மையநோய்ப் படுவ தல்லது
கடைக்கணான் பரகதி காணு மாறுண்டோ
உடைக்கணா திபன்றனக் கிளஞ்செந் தூர்த்தமிழ்த்
தொடைக்கணான் றுயர்புயத் தோகை பாகனே. 9

குறளடி வஞ்சிப்பா

பாகந்தரு பனிவான்மதி
தாரகையொடு கார்முகிலிடைப்
பொருதெனவளை யுடனிலகிய
நவமணியுமிழ் கலிகெழுபுனல்
திரைபொருமொலி முரசுடனதிர்
பைந்தமிழ்வளர் செந்திலின்வரு சேயோன்
திருந்தடி துணையெனச் சேர்பவர்
பொருந்துவர் யாரும் புகலரு நெறியே. 10

கலிப்பா

★ நெறிக்குஞ்சித் தலைமறலி நெருங்கியெதிர் வருங்காலம்
செறிக்குஞ்சித் திகழ்தருநின் செந்திலுமென் புந்தியதே
பொறிக்குஞ்சித் திரத்தினுடுப் பொரியாகப் புகுந்து கொத்திக்
கொறிக்குஞ்சித் திரச்சரணப் படைச்செவ்வேற் கொடியோனே. 11

### வண்டோச்சி மருங்கணைதல் ஆசிரிய விருத்தம்

கொடியாநின் றிடைதேய்ந்து கொழுங்கலவைத் துணைமுலையுங் குழலுந் தாங்கி
ஒடியாநின் றுளதின்னும் உமக்குமிரங் காதவுள்ள முளவோ வண்டீர்
வடியாநின் றிலங்கிலைவேல் வலனேந்தி செந்தில்அரு மருந்தன் னாடன்
முடியாநின் றளியெனுஞ்சொல் முடியாநின் றநுராகம் முயல்கின் றீரே. 12

### வண்டு விடு தூது - வெளிவிருத்தம்

ஈர நாண்முகை இளமுலைப் பசப்பொழித் தளியீரே
சூர னாள் விழித் துணையிணை கொள்வதற் களியீரே
நார நாளமென் நளினநீர்ச் செந்தில்புக் களியீரே
யார னாள்வரு வேங்கையின் மலர்கொணர்ந் தளியீரே. 13

### வஞ்சித்துறை

அளியாலுஞ் சோலை
ஒளிசேர்வான் செந்தூர்
தெளிவாயா நெஞ்சே
அழியாவீ டுண்டே. 14

### மேக விடு தூது - கலித்துறை

உண்டு வாரிதி பசுஞ்சிறைக் கிளிமயி லுருவாகி
எண்டி சாமுகம் புதைத்தயி லெனமினி யிரைத்தீரேல்
கண்டு நானிரு கண்களும் உள்ளமுங் களிகூரக்
கொண்டல் காள்இச் செந்தில்வாழ் குமரனைக் கொணர்வீரே. 15

### அம்மானை - மடக்குத்தாழிசை

வீரன்நடு வெள்வேல் வியன்செந்தில் எம்பெருமான்
பாரில்உயி ரெல்லாம் படைத்தனன்கா ணம்மானை
பாரில்உயி ரெல்லாம் படைத்தனனே யாமாகில்
ஆரணங்கள் நான்கும் அறிவனோ அம்மானை
அறிந்து சிறைஅயனுக் காக்கினன்காண் அம்மானை. 16

### இரங்கல் - வஞ்சிவிருத்தம்

மான்மகள் காதலர் மஞ்சுரும்
தேன்மலி காஉயர் செந்தூரர்
கான்மணம் நாறு கடம்பேனும்
யான்மகிழ் கூர இரங்காரே. 17

ஒரொலி வெண்டுறை

காரேய் நிறத்தறுகட் கறுவுடைக் கடுங்கூற்றங் கலந்தகாலை
யாரே விலக்குவார் அந்தோ நமரங்காள்அறிதி ரன்றே
நீரே உயப்போமா நின்று வலித்தீரேல்
கூரேய் வடிவேற் குமரன் குடநாட்டுச்
சீரேய் திருச்செந்தில் சென்று தொழுமினே. 18

வெண்பா

தொழுதிரந்து வெம்பசியாற் சோர்ந்திடுவார் கைபார்த்து
அழுதலமந் தேங்கி அலைவார் - முழுதும்
பெருகுகனை வாரிமணி பெய்திரைக்குஞ் செந்தில்
வருகுகனை வாழ்த்தாத வர். 19

கலிப்பா

★ வரங்கொண்ட உமைமுலைப்பால் மணங்கொண்ட செவ்வாயும்
பரங்கொண்ட களிமயிலும், பன்னிரண்டு கண்மலரும்
சிரங்கொண்ட மறையிறைஞ்சுஞ் சேவடியுஞ் சேவடியும் செந்தூரன்
கரங்கொண்ட வேலும்என்றன் கண்ணைவிட்டு நீங்காவே. 20

பாண் - கலித்துறை

நீங்காத நேயத்தின் நீதைத்த தையலும் நின்னையன்றிப்
பாங்காய பாண பிரிந்ததென் றால்மை பாலன்செந்தில்
யாங்கா ணலமெனில் எம்மை வினாவுதி; ஏதிலரைத்
தாங்காது நின்மதி துன்னூசி யின்திறந் தான் பிழைத்தே. 21

ஆசிரிய வண்ண விருத்தம்

★ பிழையாத தொண்டர் சிறிதேசெ யன்பு பெரிதாக நெஞ்சு மகிழ்வார்
உழையீனும் எங்கள் குறமாது கொண்கர் உமைபாலர் தங்கு மிடமாம்
புழைவாய் திறந்து வளைசூல் உழைந்து பொழிஆரம் இந்து வெனவே
மழைபோல் முழங்கி அலையாழி சிந்து வளமேவு செந்தில் நகரே. 22

தலைவி கூற்று - வெண்பா

நகைமதிய மேவடவை நாப்போல்இவ் வண்ணம்
தகைமதியாய் நின்று தழல்வாய் - அகமகிழ்ந்து
கற்பசலை தந்தார் கடற்செந்தில் வாய்எமக்குப்
பொற்பசலை தந்தார்முன் போய். 23

கலித்துறை

போய்வத னாரம்பம் ஆடார், திருச்செந்தில் புக்குறையார்
சேய்மலர்த் தாளிணை சிந்தைசெய் யார் திரு மால்மருகன்,

காய்சின வேலு மயிலுமென் னார் கடல் சூழுலகில்
பேயுறி வாளர்எவ் வாறறுப் பார்தம் பிறப்பினையே. 24

தலைவி நெஞ்சொடு கிளத்தல் - ஆசிரியத்தாழிசை

பிறர்வாய் வசையடங்கப் பிஞ்ஞகன்சேய் திண்டோள்
நறவார் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
சிறைவான் புனற்செந்தில் சேருதுமால் நெஞ்சே
குயில்வாய் ஒலியடங்கக் கூத்தன்சேய் திண்டோள்
நயமாந் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
செயிர்தீர் புனற்செந்தில் சேருதுமால் நெஞ்சே
முந்நீ ரொலியடங்க முக்கணன் சேய் திண்டோள்
நன்னீத் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
செந்நீள் புனற்செந்தில் சேருதுமால் நெஞ்சே. 25

கைக்கிளை - மருட்பா

நெஞ்சே! நுதல்வியர்க்கும் நீடுகுகன் செந்தில்அன்னாட்கு
அம்சேல் விழிகள் அவைஇமைக்கும் - பஞ்சேர்
அடிநிலந் தோயும் அதனால்
கமழும் குழல்இவள் கடலிடத் தணங்கே. 26

பாங்கி வேண்டல் - வெண்பா

அணங்காம் இவளுக் கவிர்மதியம் ஒன்றோ
வணங்கா வரும்தென்றல் ஒன்று - அணங்கூர்
இளமுருகா செந்தில்நக ரெந்தாய்வந் தாளாய்
உளமுருகா வேய்இசையும் ஒன்று. 27

தலைவியை வியத்தல் - கலித்துறை

ஒன்றுடை யான்புலித் தோலுடை யான்மைந்த னோங்குபரங்
குன்றுடை யான்றிருச் செந்தில்அன் னார்குல வாழையிள
மென்றுடை யான்நடை யால்இடை யால்விழி வேற்கடையால்
நின்றுடை யால்நிற்ப ரால்எவ ரேனும் நிலைகுலைந்தே. 28

மதங்கியார் - கலித்தாழிசை

குலைகுலுங்கு வாழையின் கோழிலைப் பசுங்கொடைக்
குளிர்நிழற்கண் இரவிதேர்க் குரகதங்கள் அருவிபாய்
அலைகுலுங்கும் நறவமுண் டயர்வுயிர்த்த காவுசூழ்
அங்கண்எந்தை செந்தில்பாடி ஆடுமா மதங்கியார்
முலைகுலுங்கு மாகில்மாரன் முடிகுலுங்கும் அமுதவாய்
மொழிகுலுங்கு மாகில்ஆவி பழிகுலுங்கும அல்குலங்
கலைகுலங்கு மாகில்நாடு நிலைகுலுங்கும் மாமுகக்
கஞ்சமுங் குலுங்குமாகில் நெஞ்சமுங் குலுங்குமே.

இரங்கல், இன்னிசை வெண்பா

குலுங்கும் முலைமேற் குளிர்பசலை கண்ணீர்
அலங்கும் அருநாணு மாய்வளையும் நீங்கும்
இலங்கிலைவே லோனை எறிகடற்செந் தூர்வாய்
வலங்கொளமுன் போம்மடவார் மாட்டு. 30

சித்து - ஆசிரிய விருத்தம்

மாட்டே மல்லேம் சித்துவித்தை மகனே செந்திற் குகன்பால்நாம்
கேட்டே அறிந்த துனக்குரைப்பக் கேளாய் இதுபொய்
அல்லமெய்யே
வேட்டேம் பசியால் உண்ணஇன்று விளங்குங் கஞ்சந் தனிலேபொன்
காட்டே மாகில் நீபடைத்த கறியும் சோறும் வேண்டாவே. 31

இரங்கல் - கலித்துறை

வேண்டின ரானால் ஊன்நகு வேலர் வியன்செந்தில்
ஆண்டகை யானார் மான்னை யாரை அகல்வாரோ
கூண்டடல் வில்லிட் டம்பு சொரிந்தே கொலைவேடம்
பூண்டு நெருங்கிக் கொண்டல் முழங்கிப் பொழிநாளே 32

பனிக்காலம் - வஞ்சித்தாழிசை

நாள்வனசம் முகங்கூம்ப, நீள்குளிர்செய் பனிக்காலம்,
வேள்மருவு செந்திலின்எங் கேள்வர்தமை நினையாவே.
மகன்றிலொடும் பெடைசேவல், பகன்றணையும் பனிக்காலம்
குகன்றனது செந்திலின்எம், அகன்றவரை நினையாவே,
தொலைபவர்மெய் குனியமதன், சிலைகுனிய பனிக்கால
மலைமகள் சேய் செந்தின்எந், தலைவர்தமை நினையாவே. 33

வெண்டாழிசை

நினைவு மொன்றே உரையு மொன்றே
பனவன் செந்தில் பணியா தொன்றே
வினையில் வீழ்ந்தவர்பால். 34

கலிப்பா

★ பால்வெள்ளை நீற்றானும் பல்லுயிரும் படைத்தானும்
சூல்வெள்ளை மணிப்பணிலஞ் சுமந்ததிருக் கரத்தானும்
சால்பெள்ள லில்லாத தனிநெடுவேற் படையானும்
சேல்வெள்ளம் பரந்துலவுந் திருச்செந்தி லிடத்தானே. 35

கலித்துறை

★ இடத்தானம் ஆறெழுத் தெண்ணக்கண் ணார்நின் இணையடிகும்
பிடத்தானம் ஆறும் பிரியா திருக்கப் பெருங்கருணைக்

கடற்றான் எனக்கருள் வாய்செந்தில் வாய்த்தென் கலைமுழுதும்
குடத்தான மாதவற் கோதிய ஞானக் குருபரனே. 36

மடக்கு ஆசிரிய விருத்தம்

பரவு வாரி வளையீரே பரவு வாரி வளையீரே
படரு நாக வரும்பீரே படரு நாக வரும்பீரே
யரவப் புணரி மகரமே யரவப் புணரிமகரமே
யவலங் கழிய நந்தனமே யவலங் கழிய நந்தனமே
பிரமாத் தண்ட லைப்புடைத்தான் பிரமாத்தண்டலைப் புடைத்தான்
பிறவா னுழைசெந் தினகரனே பிறவா னுழை செந்தினகரனே
யுரவ ராலே நாவாயே, யுரவ ராலே நாவாயே,
யோதக் கடனீக் குருகீரே யோதக்கடனீக்குருகீரே 37

தலைவியை வியத்தல் - கலிப்பா

கீரமவை ஓரிரண்டும் கிளவிதனக் கிணையாகும்
ஆரமவை ஓரிரண்டும் மலர்முலைமேல் அணியாமால்
தாரமவை ஓரிரண்டுந் தாமுடையான் செந்தில்அன்ன
கூரமவை யோரிரண்டும் கொண்டமதர் விழியார்க்கே. 38

ஊசல்

ஆர்க்குமது கரமாட மாலை யாட அணிகலையும் மேகலையும் இடையுமாட
வார்க்குவிமென் முலையுமணி வடமுமாட மதிமுகமும் நுதல்வெயர்வும் நகையுமாடத்
தார்க்கமல அடிச்சிலம்பு புலம்பி யாடத் தாழ்குழையும் நீள்விழியும் தழுவி யாடக்
கூர்க்கதிர்வேற் குகன்செந்தில் பாடி யாடிக் கோகனகத் திருவனையீர் ஆடி ரூசல் 39

ஆசிரிய விருத்தம்

★ ஊச லாட்டெனப் போய்வரு பிறப்பெனும் உடற்பொறைச் சிறுவீட்டில்
தேசி லாதபுல் லறிவுடை வாழ்க்கையின் திறந்திறந் தொழிவேனோ
காசி லாநெடுங் கடலலை வாய்த் தடங் கரைவரி வளையீன்ற
மாசி லாமணி ஏய்செந்தில் மேவிய வானவர் பெருமானே. 40

களி - தாழிசை

பெருமை மாநிலம் வலம தாய்வரு பீலி மாமயி லூர்தியார்
பிள்ளை யார்வளர் செந்தி லம்பதி லம்பதி யுள்ள மேதகு களியரேம்
பரைம னோன்மணி புவனி நாரணி பால லோசனி சூலிசாம்
பவிசு காசனி கௌரி பூசனை பண்ணும் உண்தகிம் வெளியகோ

மருவு கேழலும் மீனும் ஆனையும் மாய னுக்கு விருப்பமா
மானி னைக்கை விடான் உருத்திரன் மதியும் நாடொறும்
முயல்உணும்
அரிய வேள்வியில் அந்த ணாளர்கள் சுரபி கண்டிடின் முந்துவார்
ஐய னேசுர ராயி னார்சுரை அருந்த வானவ ரியாருமே. 41

வேற்றொலிவெண்டுறை

யாரும்இணை யடிவணங்கு மெம்பெருமான்
தும்பிமுகற் கிளையோன் செந்தில்
சூருடைய சுடர்வடிவேல் துணர்க்கடம்பந்
தொடைக்குமரற் றொழுகி லாதார்
விரிநீர் படைசூழ் வியன்மே தினிமேல்
பரிவா லுறுநோய் பசியால் ஓசியா
வரைசீர் அயரா வருநாள் கழியா
உரியார் இகழா வுணர்வோ டுயிர்போ
எரிவாய் நிரையத் தினும்மூழ் குவரே. 42

கலித்துறை

★ மூழ்கா நிலைப்புது நீர்வேட்டு மீனமுன் ஈந்துபழந்
தாழ்கான யாறு துறந்திறந் தாங்குநின் றன்னையன்றி
வீழ்கா தலினதெய்வம் வேறெண்ணி யான்மெலி யாதுசெந்தில்
யாழ்கா முறுமொழி வள்ளிபங் காவுள் இரங்குவையே. 43

இரங்கல் - இதுவுமது

இரங்கி மெய்கரிந் திருஞ்சிறை அடைந்திட ரிடைமூழ்கி
வருங்கண் நீரொடு நாணொடு மறுகிய வரிவண்டீர்
கருங்கண் வார்முலைக் கௌரிசேய் செந்திலில் கார்காலம்
ஒருங்கு நும்மையும் ஒழிந்தன ரோஎமை யொழிந்தாரே. 44

சிந்தியல் வெண்பா

ஒழிந்தன துன்பம் உவந்தன வுள்ளம்
இழிந்தன நம்வினை யெல்லாஞ் - செழும்புனல்
சேந்தன் திருச்செந்தில் சேர்ந்து. 45

இரங்கல் - ஆசிரிய விருத்தம்

சேர்ந்த போது குளிர்ந்தும் அன்பினர் தீர்ந்த போது கனன்றும்வான்
ஊர்ந்து கந்தன் உகந்த செந்தில் ஒதுங்கு வெண்பணி லங்கள்போல்
ஈர்ந்து பொங்கிருள் நுங்கி யெங்கணும் எங்கள் அங்கம் நடுங்குமா(று)
ஆர்ந்த வெம்பனி சிந்தி முந்துற அந்தி வெந்தெழும் இந்துவே 46

### இதுவுமது

★ இந்துவும் இரவியும் நின்றென உலவிய இம்பரின் எழுவகையா
வந்துறு பிறவியின் நொந்துழல் உடறொறும் மங்குதல் ஒழிவேனோ
செந்திலும் எனசிரு கண்களும் அடியவர் சிந்தையும் அருமறைநூல்
அந்தமும் மகிழ்வொடு சந்ததம் உலவிய அம்பிகை திருமகனே. 47

### கலித்துறை

★ மகவா னரசும் அழிவற்ற யாக்கையும் மன்பதையும்
செகவாழ்வும் மற்றவை யாவும்பொய் யேதமிழ்ச் செந்தில்புகுந்
தகவா ரிசமலர்ந் தங்கைகள் கூப்பிநின் றாறுதிரு
முகவா னவனைப் பணிவதொன் றேமெய் முயல்பவர்க்கே. 48

### கலித்தாழிசை

★ முயல்பவர் முயற்சியின் முன்னம் யாவையு
நயனுணர் செந்திலான் நல்குமே
நயனுணர் செந்திலான் நல்கா னாயின்
அயலொரு வானவர்கள் ஆக்குதற்கு வல்லவரும் அல்ல ரன்றே. 49

### குறட்டாழிசை

அன்றல இன்றும் எஞரெய் துவர்வேள்
மன்றலஞ் செந்தூர் வாழ்த்தா தாரே. 50

### இரங்கல், அடிமறி மண்டில ஆசிரியப்பா

தாரார் கொல்லோ தம்குளிர் தாரே
வாரா ராயின் மான்அனை யீரே
பாரா ராலோ பனிபடு நாளே
சீரார் செவ்வேள் செந்தூ ரவரே. 51

### பாங்கி கூற்று - வஞ்சி விருத்தம்

அவரும் அங்குளர் அன்பினால்
இவரும் நெஞ்சம் இரங்கினார்
சிவன்ம கன்பயில் செந்தில்வாய்
எவரு என்செய்வர் இன்பமே.

### ஆசிரிய வண்ண விருத்தம்

★ இன்பமும் துன்பமும் சங்கடங் கொண்டயர்ந் தங்குமிங்
குஞ்சுழன் றிடு மாயத்
துன்பவெங் கும்பிஅங் கந்தவிர்ந் துன்பெருந் தொண்டனென்
றுய்ந்துளங் கழிவேனோ?

புன்குருந் துந்திநன் சந்தனஞ் சிந்திமுன் பொங்கிவெண்
சங்கெறிந் தலைவீசித்
தண்பொருந் தம்பசும் பொன்சொரிந் தெங்கணும் தந்ததென்
செந்திவ்எம் பெருமானே. 53

காா்கண்டு பாகனொடு கழறல் - இதுவுமது

பெருமான் மதிபொதி சடையா னுடனுறை பிணைமான் உதவிய
செந்தூரன்
கருமா மயிலென உறைவாய் சிதறிய கணமா மழைமுகில் கண்டாலே
ஒருமான் விழிவழி புனலோ உடல்வழி உயிரோ விடுகுவள் அந்தோயான்
வருமா றறிகிலன் இனிநீ விரைவுடன் வலவா கடவுதி வன்தேரே. 54

சிந்தடி வஞ்சிப்பா

தேராதவன் வழிமறுகிய திரள் சோலை
வாரார்மல ரிடையொழுகிய மதுமாரி
நீரார்வயற் செந்தூரனை நினையாதார்,
யாரேனு
எழுவகைப் பிறப்பினு மியங்கி
அழிகுவா் கறங்கென அவலம்நனி உழந்தே. 55

வண்டு - கலித்துறை

உழவாத மம்மரும் உன்னாத நெஞ்சும் உறாப்பசப்பும்
இழவாத நாணும்எங் குண்டுவண் டீரியல் சோ்குறிஞ்சிக்
கிழவா னவனை இளையோன் எனுந்தன்மை கேட்கிலராய்த்
தொழஆ தரத்தொடு செந்தில்சென் றேகண்ட தோகையா்க்கே. 56

வெண்பா

★ தோகைபுறம் ஆக்குந் துணைத்தாள் அருவினையேன்
ஓகை யம்ஆக்க வொண்ணாதே - பூகமலி
தேங்கடம்பாய் செந்தி திருநகரில் வீற்றிருக்கும்
பூங்கடம்பா நீதான் புகல். 57

இடைச்சியாா் - கலிமுரி

புகலும் வாய்மொழிப் பால்விலை கூறுவாா் போல் நிலாநகை
பூத்த செவ்வாய் மலா்ந்
தகலும் வாள்மறு கெல்லாம் மறுகச்சென் றாவின் பால்விலை
யாக்கும் இடைச்சியாா்
தகலு மாகுங் குடமுலைப் பால்விலை தனைய லால்சிவன்
சந்ததி செந்தில்வாய்
இகலும் வாள்நெடுங் கண்ணொடு நெஞ்சையும் இவா்விற்
றால்இனி யாா்விலை கொள்வரே. 58

தலைவி கூற்று - ஆசிரிய விருத்தம்

கொள்வா ரன்றோ செவிப்புலத்தெங் குலத்தார் வலித்த கொடுங்
கடிப்பின்
வள்வார் முரசங் கறங்கோதை மணம்வேட் டயரும் மனைமுன்றில்
கள்வார் கடப்பந் தொடைச்செந்திற் கந்தன் வேல்போல்
காய்கணைபாய்
புள்வார் பொருவெங் களத்தோதை கேட்டே அகன்ற போரேறே. 59

ஆசிரிய விருத்தம்

★ ஏறிரும் பசலைக் கலவைமான் மதச்சே றெழுதிய வழிமதக் கலுழி
இரை த்தெறி கரடத் திரள்திணி புழக்கை இகற்கரி மருப்புறழ் முலைப்பூண்
நாறிருங் கூந்த லேந்திழை யவர்பா னலந்தனக் கலந்துழன் றவமே
நாள்கழித் தவலப் படுகுழி கிடக்கும் நான்கதி காணுமா றுளதோ?
ஆறெழுத் துளங்கொண் டைம்புல னடக்கி அவாவறுத் தொருநெறி துருவி
அகங்குழைந் துருகிப் பருகுமன் பினருக் கானந்த ஞானவா ரிதியே
பாறெழுந் திரைக்குந் திரைப்பசுங் குருதிப் பருதியஞ் சுடரிலை நெடுவேற்ப்
பண்ணவா விரைப்பூந் தண்நறா வயல்பாய் பைந்தமிழ்ச் செந்தில்
வானவனே. 60

இதுவுமது

★ வானமும் புவியு மாய மாறில்ஐம் பூத மோதில்
ஊனுடம் பாதல் நாயேன் ஊழ்வினைப் பகுதி யன்றோ
கூனிளம் பிறைதோய் நெற்றிக் கொடிமணி மதில்சூழ் செந்தில்
தேனினம் தொகுதார் மல்கு செஞ்சுடர் வேலி னானே.

கார்கண்டு பாகனொடு கழறல்
இணைக்குறள் ஆசிரியப்பா

வேலின் கிளரொளி மின்னொடுந் துவன்றிச் சூலின் கடலென
முழங்கி மாலின் கருகிக்
காலின் கடுவிசைத் தெறிந்து, மேலின் பரந்து பாலின்பஃறுளிசிதறிக்
கோலின்பொழிந்து குனிசிலை வளைத்தனவாலோ;
வாலின் சிறந்தோன் மைந்தன்
சேலின் திகழ்வயற் செந்திலின் கொண்மூ உயங்குதேரினு
முந்துறுமாலோ
சால்பின்கேள்விப்பாக தகவினிஎன்னாமாலோ
நூலின் சிறந்தநுண்ணிடை தனக்கே. 62

இரங்கல் ஆசிரிய விருத்தம்

தனக்கோர் உவமை யில்லாத தந்திக் கிளையான் செந்திலும்என்
மனக்கோ யிலுங்கொண் டவன்இணைத்தாள் வணங்கா தவரின்
இணங்காராய்
எனக்கோர் உறுதி யியம்பாமல் இதண்காள் ஏனல் காள்கிளிகாள்
புனக்கோ கிலங்காள் எங்கொளித்துப் போனார் இருந்த மானாரே.63

தழை - கலித்துறை

மானார் விழிமான் மகள்கா தலனார் வாழ்செந்தூர்
ஊனார் வடிவேல் உரவோய் இனிவே றுரையுண்டோ
வானார் விழையுந் தழையோ தந்தாய் அம்மாநங்
கானார் குழலாள் உயிர்தந் தனைநீ கண்டாயே. 64

மறம் - ஆசிரிய விருத்தம்

கண்டாலும் மனம்பதைக்குங் கடுங்கூற்று நடுங்கியெமைக் கடல்சூழ்
செந்தில்
வண்டாலும் துணர்க்கடம்பன் மலர்ச்சரணம் மறவாத மறவ ரேயாம்
பெண்டால்இன் றுளமயங்கி உயிரைவிடத் தூதுவிடும் பெருமான்
தன்பால்
தொண்டால்எங் களுக்குரைக்க வருந்தூத அவற்கி யம தூதன் நீயே. 65

தலைவனையே வேண்டல், வெண்பா

தூதுசொல வேண்டிச் சுரும்பினையும் மானினையும்
மாதுசெல விட்டாலும் மாட்டாவால் - ஓதுசெந்திற்
காங்கையா ஆறிரண்டு கைத்தலத்தாய் நின்றன்னை
வேங்கையாம் என்றே வெறுத்து. 66

இரங்கல் - கலித்துறை

வெறுப்பார் அவரென்னை மின்னனை யாரெனில் வெம்பிழையும்
பொறுப்பார் மறந்தும் புறக்கணி யார்புணர்ந் தாவிதந்துள்
நிறுப்பார் புலவியில் நீடல்செய் யார் நினை வார்வினைகள்
அறுப்பார் திருச்செந்தில் வாய்இவ ரார்வந் தலைப்பவரே. 67

எழுதரிதென்னஏந்தலை விலக்கல் - கழித்தாழிசை

அலைவாய்வளம் நந்தூர்ள நில்வாய்விரி செந்தூர்
அடல்நாட்டிய கதிர்வேலவர் குடநாட்டன மனையாள்
முலைதாமெழு துவையேலவை குழையாமுழு மதிபோல்
முகம்நேரெழு துவையேல்நகை புரியாதிரு புருவஞ்

சிலைபோலெழு துவையேலவை குனியாவடி தளிர்போற்
திடமாய்எழு துவையேல்அவை நடவாகிளி துவர்வாய்
இலவாயெழு துவையேலது கலவாநிறை யமுத
எங்கேயெழு துவைநீகிழி செங்கேழ்அயி லவனே. 68

தலைவியை யாற்றுதல் - வெண்பா

அயில்வேற்க ண்நல்லாய் அஞர்கூர்ந் தலமந்
துயிர்வேட்கை வாட்டம் ஒழிவாய் - பயிலுமதன்
பூங்கைக் கடம்புண்டு போணால் தரச்செந்தில்
வேங்கைக் கடம்புண்டு மேல். 69

விலக்கல் - ஆசிரியத்துறை

மேல்வா னவர்தம் சிறையறுத் துயர்ந்த விளங்கிலை
நெடுவேல் துளங்கெழிற் குமரன் வியன் செந்தில்
சூல்வாய்ப் பணிலம் கறங்கும் அலைவாய்த் துறைவா இனியெம்
பிறைவாள்நுதலின் துணர்த்தா ரகலம் புணர்ப்போ டேகின்
பால்வாய்க் குழவி மறிமான் மறுகும் புகுவாய்ப் புலியின்
தொகைவால் புடைப்பப் பணைக்கோட்டு
நால்வாய் இரையாய் வேட்டைபா யரவ நவிலும் பாலைத்
தெனலாற்
கவலை நளிர்நீர்ப் பொருநைத் தெளிநீள் பழன
நன்னாட்டகமன்றே. 70

வெண்பா

அகமன் றலங்கமலத் தாள்வினையேன் அன்பாற்
புகமன் றகமகிழ்ச்சி பூத்தான் - தகவென்றூ
ழுந்தினக ரம்போல் ஒளிகொண்ட வேற்படையோன்
செந்தினக ரம்போற் சிறந்து. 71

பிரியேனென்றல் - கலித்துறை

சிறந்தார் பரவுந் திருச்செந்தி லார்சிவன் தீநுதற்கட்
பிறந்தார் இணையடி பேணலர் போலப் பிணியவிழ்தார்
புறந்தாழ் குழலி புலம்பேல் உனையைம் பொறிகலங்கி
இறந்தாவி யான்படி னும்பிரி யேன்பிறப் பேழினுமே. 72

ஆசிரிய விருத்தம்

★ ஏழுயர் கடாயானை மேல்வெண் குடைக்கீ ழிணைக்கவரி யெறிய இருபால்
இன்னிய முழங்கமட வன்னங் குழீஇயனைய ஏழையர் மருங்கு சூழக்
காழகில் நறுங்குற டுரிஞ்சுபூந் தேய்வைகடி கமழ்தடவும் வலையம்நிமிர்தோட்
கண்ணிக் கடம்பசைய வேல்கொண்டு நீவரக் கண்கொண் டுளங்குளிர்வனோ

வாழிமுரி திரைமுகடு கிழியஎழும் எழுபுரவி அருணமிசை கொடிநெடுந்தேர்
ஆயிரங் கதிர்இரவி பாயிரும் பகலுமிரு ளடையமிடை சினைவிடுதடங்
கோழிலை நறும்புன்னை துன்னுநுண் தாதுபடு குவிமுகை மருட்டு முடவுக்
குடவளை மணித்தொகுதி நிலவுகாய் செந்தில்வரு குலவமரர் தம்பி ரானே. 73

ஆசிரியத் தாழிசை

★ தம்பிரான் செந்திலிற் சரவணத்து உதித்தோன்
அம்பொனார் கழலிணை யன்புறப் பணிந்தோர்
உம்பராய் மன்னுவர் உயர்நிலை யடைந்தே. 74

மாலை இரத்தல் - கலித்துறை

அடைக்கலந் தானிவ ள்ஆனாலும் மார்பத் தணிகடப்பந்
தொடைக்கலந் தாருயிர் சோர்தநன் றோதொல் அவுணர்வெம்போர்
நடைக்கலந் தாவிப் பலியூன் உடனுண் டெழுங்கதிர்வேற்
படைக்கலந் தாங்கிய கையாய்! தென் செந்திற் பதிக்கந்தனே! 75

இரங்கல் - வெண்பா

கந்தமலர் ஆலக் கமழ்கூந்தல் ஏந்திழையார்
தந்தமல ராலத் தளருமோ - வந்தவினை
போக்கும்அரன் சேயொளிக்கும் பூம்புனற்செந் தூரமர்ந்த
கோக்குமரன் பூந்தார் குறித்து. 76

இதுவுமது - ஆசிரியத்துறை

குறுமுனிவற் கறமுரைத்த குமரன்மா செந்திலினெங் கொலைவில் வேடர்
சிறுமியைம ணம்புணர்ந்து தீர்ந்திடினும் அன்பகத்தில் தீரா ரன்றே
சிறுமியைம ணம்புணர்ந்த தன்பிற்றீர்ந் தாராயின்
கறிவளர் வரைநாடற் கென்னா மென்னாம் உணர்ந்த கல்வி யாறே.77

வெண்பா

★ ஆறுமுக மேன் கண்க ளாறிரண்டு மேன்?அடியேற்
கேறுவினை ஒழிப்ப தெல்லாமோ - நீறணிவான்
கன்றே! திருச்செந்திற் கற்பகமே! நின்னருட்கண்
ஒன்றே அமையாதோ ஓது. 78

இரங்கல், ஆசிரிய விருத்தம்

ஓது வார்கொலோ உயிர்உடற் பொறைமறித் துதவுமா றுயர்ந்தோங்கி
மோது வார்இள முகிழ்முலை வனிதையர் முடிந்திறந் திடுங்காலைக்
காது வார்மணிக் கனங்குழை உழைமகள் காதலர் திருச்செந்தில்
போது வார்குழ லாய் கல்வி வேட்டெமைப் புல்லுவிட் டகன்றாரே. 79

### இதுவுமது

அகலுறார் கனவலாம் நனவெ லாந்தொடப்
புகலுறார் உளங்குடி புகுந்த காதலர்
இகலுறா வேள்செந்தில் இணங்க லாரின்யான்
உகலுறா தாவிநின் றூச லாடவே. 80

### சுனையாடல் கூறித் தோழிநகுதல் - இதுவுமது

ஆடு பூஞ்சுனை சந்தணிந் தாய்மலர்
சூடி வாய்விளர்ப் புந்தரின் தோகையாய்
சேடன் வேற்படைச் சேவகன் செந்திலின்
நாடி யானுஞ்சென் றாடுவன் நானமே. 81

### தலைவன் கூற்று; இரங்கல் - இதுவுமது

நானிலமும் எண்டிசையும் நன்கிசையும் நாளார்
தேனகு கடம்பர்உயர் செந்தில்நகர் போல்வார்
மானகு கருங்கண்இணை வஞ்சம்இட மானால்
யானும்உயி ரும்புவியும் என்கொல்உயு மாறே. 82

### தோழிகூற்று; இரங்கல், ஆசிரிய விருத்தம்

மாறு படுஞ்சூர் ஓட முனிந்தார் வானுயர் செந்தூர்வாய்
ஊறு படும்பே ராசையின் நம்பால்ஊரர் இரங்காரே
நீறு படும்பூண் ஆரமு மொன்றோ நேரிழை கண்சோர்நீர்
ஆறு படுங்கால் யாவர் அறிந்தார் ஆவி படும்பாடே. 83

### கலித்துறை

★ பாடாத நாவும் பணியாத சென்னியும் பாவித்தன்பாய்
நாடாத உள்ளமும் நான்படைத் தால்நர கேழுஞ்சென்று
கூடா துயர்கதி கூடுவ னோகுன் றெறிந்த வைவேல்
சேடார் மதிற்செந்தி லாய்என்கொ லோநின் திருவருளே. 84

### தலைவி கூற்று வெண்பா

அருட்கடல்வாழ் செந்தில்நக ராய்வளைக்கை நல்லாய்
பொருட்கடல்வேல் மன்னர்ஏன் போனார் - மருட்குவளைக்
கண்பொழிய முத்தம் கனகம் முலைபொழிய
நண்பொழிய நாமெலியும் நாள்.. 85

### பாங்கி கூற்று - கலிப்பா

நாண்நளினந் தளையவிழ்ந்த நறுமலர்ப்பொற் பொகுட்டகட்டுக்
கோணளினந் துறங்குவயற் குமரன்மா செந்திலின்வாய்ப்
பாணளினந் தலர்அளக பாரமுகில் சோரமணிப்
பூணளினந் தனித்தாவி புல்லாது நில்லாதே. 86

வெண்பா

★ நில்லாத நீயும் நிலைநின்ற என்றனக்குப்
பொல்லா தனவாம் புலனடக்கிப் - பல்பகலுங்
கார்த்திகையான் செந்திற் கடிநகரைக் கண்ணாரப்
பார்த்திகையால் நெஞ்சே பணி. 87

கலித்துறை

★ பணிப்பகை மயிலும் சேவற் பதாகையும் பன்னிரண்டு
மணிக்குழை களும் ஓராறு வதனமும் வாகை வேலும்
தணிப்பசுங் கடப்பந் தாரும் தண்டையந் தாளும் நாளுங்
கணிப்பருஞ் செந்தி லாய்என் கருத்தைவிட் டகன்றி டாவே. 88

இரங்கல் - இதுவுமது

அகன்றால்அகலும் புணர்ந்தால் புணரும்என் ஆவியம்மா
குகன்தா தவிழ்பொழிற் செந்திலின் வாய்க்குளிர் மாமதிபோல்
முகன்தாழ் கனங்குழை முத்தணி மூரல் முகிழ்முலைமான்
மகன்றான் எழுதிய ஓவியம் போலும் மயிலினையே. 89

தலைவியை வியத்தல் - ஆசிரிய வண்ண விருத்தம்

மயில்கடவி அண்டகோள முகடதிர அம்பொன்மேரு வரைபிதிர
அங்கைநீடுகூர்
அயில்சுழல உம்பர்வாழ உலகைவலம் வந்தசோதி யருள்குமரர்
செந்தில் போலியார்
குயின்மொழிக ளிந்தபாகு மடமயில்வி ளங்குசாயல்
கொடியிடைது வண்டு வாடுநூல்
இயலுநுதல் இந்த்ரசாபம் இணைவிழிகள் இந்த்ரநீல மிலவிதழும்
இந்த்ரகோபமே. 90

கார்கண்டிரங்கல் - ஆசிரியவிருத்தம்

கோப மெழுந்தன மேக முழங்கின கோடல் நிரம்பினநீள்
சாபம் வளைந்தது தோகை பரந்தன தாரவர் வந்திலரால்
நீபம் மணங்கமழ் மார்பினர் செந்திலின் நேரிழை நெஞ்சிடையே
சோபம் மலிந்தது ஆவி தளர்ந்தது சோர்வன கண்டுளியே. 91

கலித்துறை

துளியாது கண்புனல் சோராது மெய்துதி யாதுசொல்நாக்
களியாது நெஞ்சகம் கைகுவி யாதொருக் காலும்மறை
தெளியாத வானவர் சேனா பதியைத்தென் செந்திலின்வாய்
வெளியாய் எதிர்ந்து தொழார்நர கேழினும் வீழ்பவர்க்கே. 92

### பாங்கிஆற்றுதல் - குறள்வெண்பா

வீழ்வார் எழார் பொருட்கு விட்டுநமை வெற்பயிலால்
போழ்வார்செந் தூரடையார் போல். 93

### பிச்சியார் - ஆசிரியவிருத்தம்

போலிதனெக் கென்றுமிலாப் புண்ணியன்கண் ணுதற்கடவுள் புதல்வன் கோலப்
பீலிமயி லியற்செந்தில் உலைவேற்கைக் கொலைவேற்கட் பிச்சி யாரே
நூலிடையைக் குறைத்துமணிப் பணைமுலையைப்ப பெருக்கியென்றும் நோயே செய்தீர்
நீலமுகில் ஓதிகுறைத் துயிர்குறைப்ப தோஉமக்கு நீதி தானே. 94

### தலைவி பாங்கிக் குரைத்தல் - கலிவெண்பா

தானக் குனிகோட்டுத் தந்தியினை யும்விலக்கிக்
கானக் குடிஞைக் கலுழியினிற் காத்தளித்துத்
தேனக்க செச்சையந்தார்ச் செந்திலார்க் கன்பரிஎன்
ஊனெக் குருக உயிரிற் கலந்தார்க்கு
நானக் கமழ்கூந்தல் நன்னுதலே வாரலையென்
றியானுற் றுரைப்பதெவ்வா றின்று. 95

### கலிவெண்பா

★ இன்றுலகில் நல்குரவால் ஈடுபடுந் தன்மையினால்
அன்றும் அருவினையேன் ஆன்றஅறஞ் செய்யகிலேன்
என்றும் பிறப்பினுஇம்ப் பெற்றியேம் முற்றும்எனைக்
கன்றும் மனத்தாற் கவலுழந்து நில்லாது
குன்றெறிந்த செந்திற் குழகாநின் பூங்கழற்கால்
சென்றுதொழு மாறன்பு செய். 96

### தாய்கூற்று - கலித்துறை

செய்யவ னேயெனும் செந்தில்எந் தாயெனும் செவ்வடிவேற்
கையவ னேஎனும் கங்கைமைந் தாஎனும் கண்துளிநீர்
பெய்யஎ நேகந் தரம்எழும் போய்விழும் பிள்ளைமதி
வெய்யவ னேஎனும் வேறறி யான்என் விளங்கிழையே. 97

### தலைவி கூற்று - ஆசிரியவிருத்தம்

இழைக்கும் கூடலும் என்னிரு கண்களின் இமைகளும் இரவெல்லாம்
உழைங்குங் கூடல மந்துதென் செந்திலா யொருகணங் கூடாவால்
மழைக்கண் அம்பிகை மலர்க்கரங் கோட்டியே வார்முலை பீரோட
அழைக்க நின்றுகூத் தாடிய மணிச்சிலம் பலம்புசே வடியானே. 98

கலிப்பா

★ அடியாரிம் உளமும்உகன் பறியாத என்புன்சொல்
முடியாத நக்கீரர் முறுகாற்றுப் படையாமோ
தொடியார்பன் னிரண்டுதடந் தோளார்க்குத் திருச்செந்தில்
வடிவாய்வள் ளுகிர்ச்சேவல் வலனுயர்த்த கொடியார்க்கே. 99

வெண்பா

★ ஆர்க்குங் களிவண் டறையும் பொழில்திருச்செந்
தூர்க்கன் புடன்நீசென் றுள்ளமே - கூர்க்கும்
எழுமையினும் நீ பிறப்பில் எய்தாமல் சேயைத்
தொழு; மயிலும் வேலுமெனச் சொல். 100

திருச்செந்திற் கலம்பகம்

முற்றிற்று.



# சுவாமி நாத தேசிகர் இயற்றிய திருச்செந்திற் கலம்பகம்

## தெளிவுரை

அருணகிரிதாசன்
டாக்டர். ம. இராமகிருஷ்ணன். M.A., B.T., Ph.D

### பாயிரம்

*தமிழாகிய தென் கடலைக் கடக்கும் தோணி போல், சந்திர சூரியர்களுக்கும் தன் பன்னிரு விழிகளால் அருட்கண்ணோக்கம் செய்யும் முருகனுக்குரியதாகிய திருச்செந்திற் கலம்பகம் என்னும் நூலைத் துறைசைநகர் என்னும் திருவாவடுதுறைச் சுவாமி நாத தேசிகர் தமிழால் இனிமையாகப் பாடியுள்ளார்.*

### விநாயக வணக்கம்

*திருச்செந்தூரில் வீற்றிருக்கும் சிலம்பணிந்த திருவடியை உடையவரும், வல்லபையின் கணவரும் வெண்மையான தந்தத் தைக் கொண்டவரும், தலைக் கோலம் என்னும் அணிகலனை அணிந்துள்ளவரும், யானைத் திருமுகத்தை யுடையவருமான விநாயகரை வணங்கி, நீண்ட சடையுடைய, திரு நீறணிந்த சிவனார் மைந்தன், நெடிய வேலுடையோனாகிய முருக வேளைக் கலம்பகம் என்னும் செந்தமிழ்ப் பாமாலையாற் பாடுகின்றேன்.*

*(நிலம்-நிலம் பிளக்கும் படி; நீடு - நீண்ட, நெடிய; இலம்பகம்-தலைக்கோலம் என்னும் நெற்றியணி)*

### நூல்

### மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா - நாலடித்தரவு

*முருகவேளே! வேதப் பொருளை பொதியமலை அகத்திய முனிவன் வினவ, பிரமனும் அறியாத அறம் முதலான உறுதிப் பொருள் நான்கையும் முத்தமிழையும் உணர்த்தியருளியவன் நீயே! பசுந்தோகை விரித்த மயிலைப் போன்று நவமணிகள் பதித்த சக்கரங்களையுடைய ஏழு குதிரைகள் பூட்டிய தேரில் பவனிவரும் சூரியனைத் தடுக்கும் அளவு உயர்ந்துள்ள அழகிய, மணிகள் பொருந்திய மாளிகைகள் மிக்க கோட்டையை உடைய திருச்செந் தூர்த் திருத்தலத்தில் அழகு பொருந்த நீ வீற்றிருக்கிறாய்.*

(சுருதி-வேதம்; அம்புயன்-பிரமன்; கலவம்-தோகை; ஆழி-சக்கரம்; பரி-குதிரை; தினகரன்-சூரியன்; சினகரம்-கோயில்.)

**ஈரடித்தாழிசை**

உடலாகவும், உயிராகவும், உணர்வாகவும், அவ்வுணர்வை ஊட்டும் தலைவனாகவும் விளங்கி, முதலும் முடிவும் அற்ற வெட்ட வெளியாகி, வாக்கும் மனமும் கடந்து, விண்ணிலும் மண்ணிலும் வியாபித்து, போக்குவரவு அற்றவனாய், உருவமாகி, அருவமாகி, வேதாந்தம், சித்தாந்தம், கலாந்தம், போதாந்தம், நாதாந்தம் இவற்றுக்கு அப்பாலாய், முப்பத்தாறு தத்து வங்களிலும் கலவாது கடந்து நிற்கும், ஒப்பற்ற பரம்பொருள் நீ! இப்படிப்பட்ட உனக்கென்று ஒரு பெயர் இல்லையென்றாலும் இன்று குகன் என்று அழைக்கப் படுவது உன் அருள்விளையாட்டேயன்றோ!

(வெளி-வெட்டவெளி; பரவு-போற்றும்; அறைய-சொல்ல)

**ஓரடி அராகம்**

அரிய வேதங்கள் முறையிட்டு வணங்கவும், வீரக்கழல்கள் முழங்கி ஒலிக்கவும், அடியார்கள் தம் உள்ளத்தில் நினைப்பது உன்திருவடியையே. அருவமாகியும், உருவம், அருவுருவம் என இரண்டாகியும் நிலவைப் போல் ஒளிமிகக் குளிர்ந்திருப்பது உன்திருமுகம். வள்ளி, தெய்வயானை என்னும் தேவியர் இருவரும், மேகத்தை விரும்பும் மயிற்கூட்டம் போல் விரும்புவது உன் பேரழகையே. அலைகளும் ஆரவாரமும் மிக்க கடலைக் காட்டிலும் பெருகி வளர்வது உன் திருவருளேயாம்.

(அறை-ஒலிக்கும்; பறை-முழவு; விழைவது-விரும்புவது; கெழு-மிகுந்த; கலி-ஆரவாரம்.)

**பெயர்த்தும் ஈரடித் தாழிசை**

அன்னை என்றும் தந்தை என்றும் விளங்கி உலகனைத்தையும் படைத்தருளும் உனக்குச் சேய் (பிள்ளை) என்றும் பின்னும் ஒரு பெயர் வந்தது ஏன்? முந்திச் சென்று தங்கும் இடமாகக் கொண்டு அடியார்களின் உள்ளத்தாமரை தோறும் இருப்பவனாகிய உனக்குத் திருச்செந்தூர் என்று சொல்லப்படும் திருத்தலமும் விருப்பமாக உள்ளதே! நீ வேலேற்று வரும் போதன்றிப் (பகைவரைச்) சம்ஹாரம் செய்ய இயலாதா? உனக்கு மயிலேற்றம் ஏன்? வேறு ஏற்றம் (பெருமை) பெறவில்லையா? ஆறு குளிர் நிலவுகளோடு பவளமலையில் பன்னிரண்டு சூரியர்கள் உதித்தது போல், கருணை பொழியும் ஆறு திருமுகங்களையும், பெருமை மிக்க கனக மணிக் குண்டல வரிசையையும், அழகிய நீண்ட

தோள்களையும், தாமரை போன்ற சிவந்த திருவடியையும், தூய வடிவத்தையும், பாடாமல், நினைக்காமல், போற்றித்துதிக்காமல் இருக்கும் என்னை வினையேதும் அண்டாத உன் அடியார்களோடு சேர்த்து வைத்தாய்.

(சேய்-சிவந்தவன், பிள்ளை; முளரி-தாமரை; ஏற்றம் - ஏறி அமர்தல்; பெருமை; நிரை-வரிசை;)

**நாற்சீரடி அம்போதரங்கம்**

பெருமானே! காமமும் சினமும் கள்ளுண்டது போன்ற மயக்கமும் என்னுள் கலந்து என் அறிவை மயக்கியதால் பிறத்தலும் இறத்தலும் உன்னை மறத்தலும் அல்லாது உன்னை (ஒரு போதும்) வணங்கவில்லை.

(களி-கள்)

**நாற்சீரடி அம்போதரங்கம்**

உண்பதையும் உடுப்பதையும் மகிழ்ந்து விரும்பித் தேடினேன். உறக்கத்திலும் விழிப்பு நிலையிலும் கலக்க மடைந்து வாடினேன். நற்கதிபெறும் வகை இதுதான் என்னும் நல்ல உணர்வை இழந்தேன். செய்யத் தக்கது இது என்னும் தெளிவு இல்லாத பேயைப் போன்றவன் ஆனேன்.

(கண்படை-உறக்கம்; உய்திறம்-வாழும்வகை)

**முச்சீரடி அம்போதரங்கம்**

எழுதாத (கேள்வியால் கற்கப்படும்) வேதங்களின் உட்பொருளாக உள்ளவனே! செக்கர் வானம் போன்றசிவந்த மேனியரான சிவபிரானின் திருப்புதல்வனே! நான் நற்கதி பெறும்படி எவ்வாறு ஆட் கொள்வாய்? உன் திருவருட்செயல் இன்னது எனத் தெரியாது. அதனை அடியேனுக்குக் கூறி அருள்வாய்.

**இருசீரடி அம்போதரங்கம்**

மெய்ப்பொருளும் நீ! (உணர மறுப்பார்க்குப்) பொய்யும் நீ! விண்ணுலகமும் மண்ணுலகமும் நீ! தலைவன் நீ! செம்மேனியன் நீ! ஆதிப்பொருள் நீ! ஜோதி நீ (என வாங்கு - அசைநிலை)

**தனிச்சொல்**

**1. ஆறடி நேரிசை யாசிரியப்பா-சுரிதகம்.**

உலகம் அனைத்தும் நீ யல்லாது இல்லையாகும். அழகிய கடப்ப மாலை யணிந்தவனே! உன்னுடைய தாமரை போன்ற திருவடி என்னுள்ளத்தில் நிலைத்திருக்க வேண்டி, உடலாகிய

அற்பமான சுமையோடு (உலகியலில்) காற்றாடி போல் சுழன்று திரியாமல், பெரிய சுறா மீன்கள் எறியும் சங்குகள் ஊர்கின்ற கடற்கரையிலுள்ள திருச்செந்தூரைப் போற்றித் துதிப்பேன்.

(பொறை-சுமை; கறங்கு-காற்றாடி; காமர்-அழகு; பிறங்கு-பெருத்த; நந்து-சங்கு)

### 2. வெண்பா

திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள குகனைத் துதிப்பதே எனக்குரிய பணியாகும். என்னை ஆண்டு அருள் புரிவதே அவனுடைய தன்மையாகும். எனவே, என் நெஞ்சே! மறப்பெண்ணின் மணாளன் மேல் அன்புவைப்பது முதல், வாழ்வெல்லாம் குறவள்ளி நாயகனின் புகழையே கொள்வாய்.

### 3. கலித்துறை

திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள முருகனின் ஒளிமிக்க தாமரை போன்றதும் தண்டையணிந்துள்ளதுமான திருவடியை இடை விடாது தொழுது தியானிப்பவர்கள் பிறவி யென்னும் நோயில் விழ மாட்டார்கள். எமனைக்கண்டு அஞ்ச மாட்டார் கள்; அடியார் கூட்ட மன்றி வேறு எவருடனும் நட்புக் கொள்ள மாட்டார்கள்; நோயினால் துன்பப் படமாட்டார்கள்; வேறொரு தெய்வத்தை நினைக்க மாட்டார்கள்

(நள்ளார்-நட்புக் கொள்ளார்.)

### 4. ஆசிரிய விருத்தம்

முருகன் திருவடிக்கு அன்பில்லாதவர்கள் எவ்வளவு கற்றிருந் தாலும், நீண்டநாள் வாழ்ந்தாலும், வளமான வாழ்வு பெற்றாலும், (மீண்டும் மீண்டும்) பிறப்பதிலிருந்து விடுபடமாட்டார்கள். முருகன் வீற்றிருக்கும் ‘திருச்செந்தூர்’ என்று (ஒரு தரம்) சொல்பவர்கள், தம் வாழ்வில் தாழ்ந்து போனாலும், வறுமைப் பட்டு யாசிக்க நேர்ந்தாலும், அறிவு நலம் குறைந்தவராய்ச் ‘சரவணபவ’ என்னும் ஆறெழுத்தை நினையாவிட்டாலும், (நிச்சயம்) வீடு பேறு பெறுவார்கள்.

(கலி-துன்பம், வறுமை; முந்தில்-முந்துஇல்-முத்தியின்பம்)

### 5. ஆசிரியப்பா

தாமரையிலிருக்கும் நான்முகனாகிய பிரமன் வேதப் பொருளுக்கு (பிரணவப்பொருள்) குற்றம் உண்டாகும் படி மொழிய (பிரணவத்திற்குப் பொருள் தானே என்று அகந்தை யுடன் பிரமன் கூறினான் என்று வடமொழி ஸ்காந்தம் கூறும்.)

*அவனைத் தண்டித்த எங்கள் குழந்தைத் தெய்வமே! (செம் மேனியழகா)* பரந்த இருளை உண்ணும் பல கிரணங்களைக் கொண்ட இளஞ்சூரியன் கடலிடையே எழுந்தது போன்று, மேகம் போன்ற கலாபங்களையுடைய புள்ளிமயில் மீது சிவந்த ஒளி மிக்க திருமேனி விளங்கும்படி எழுந்தருளினாய். தெய்வ யானையையும், வள்ளியையும், தூய்மையான வெற்றியுடைய வேலையும், சேவற் கொடியையும், ஆறு திருமுகங்களையும், திரு நீறணிந்த தோள்களையும், கந்தவேளே! உன்னுடைய நாமத்தை யும், நீ எழுந்தருளியுள்ள திருச்செந்தூரையும் வணங்கவும், நினைக்கவும், வாழ்த்தவும் விரும்பி, என்னை ஆட்கொண்டு அருள வேண்டி உன்னைத் துதித்துப் போற்றுகின்றேன்.

*(கடகம்-கங்கணம்; சேய்-குழந்தை, சிவந்தவன்; பொறி-புள்ளி கருணி-பெண்யானை (தெய்வயானை); அருணி-மான் சாதிப் பெண் (மான் மகளாகிய வள்ளி)*

## 6. வெண்பா

முருகன் மகிழ்ந்து விரும்பித் திருச்செந்தூரில் வீற்றிருப்பதை யுணர்ந்து அவனைத் தியானிக்காமல், அதற்கு இதற்கு என்று உள்ளத்தை வீணில் அலையவிட்டு முழுமுதற் பரம்பொருளை யடைய முயற்சி மேற்கொள்ளாவிடில், நெற்றிக்கண்ணுடைய சிவன் மைந்தன் நமக்கு அருள் செய்யமாட்டான்.

*(நுதற்கண்அவன்-நெற்றிக்கண்ணனாகிய சிவன்; சந்ததியான்-மைந்தன்.)*

## 7. புயவகுப்பு ஆசிரிய வண்ண விருத்தம்

திருச்செந்திற் கந்தவேளின் புயங்கள் உலகில் வாழும் அனைத்துயிர்களையும் படைத்தருளின. பிரணவப் பொருளை உரையாத பிரமனைத் தண்டித்தன. இந்திரனுக்கு வானுலக அரசு தந்து முடிசூட்டின. நக்கீரரைச் சிறையிலிருந்து விடுவித்து அஞ்சேல் என்று அபயம் தந்தன. வள்ளி, தேவ சேனையைத் தழுவி இன்பம் பெற்றன. செந்தமிழ்ப்பாடல்களையும் கடப்ப மாலையையும் சந்தனத்தையும் அணிந்தன. தொழும் அடியார் கூட்டத்தின் துன்பம் போக்கின. சூரனையும் கிரௌஞ்ச மலை யையும் வேலைக் கொண்டு பிளந்தன. அறம் பிறழாத தமிழ் முனிவன் அகத்தியனாற் புகழப்பட்டன. உமையின் முலைப் பாலை உண்ண உந்தின. சூரனைச் சுற்றத் தோடும் அழித்தன. மயில்மீ தேறிப் புவனமுழுவதையும் எட்டுத் திசைகளையும் வலம் வந்தன. வான் முட்டும் அளவுக்குக் கோழிக் கொடியைத் தாங்கி நின்றன.

(முருகன்) முழுமதி போன்ற திருமுகத்தில் கடைக்கண் அருளை மிகுந்து பொழியக் கடல் போல் ஆரவாரித்தன.

(நீபம்-கடம்பு; வாகை-வெற்றி; பீர்-பெருகுதல்)

### 8. கலித்துறை

திருச்செந்தூர் என்னும் சிறந்த தலத்தில் வீற்றிருக்கும் மால் மருகனாம் முருகனின் திருக்கரத்தில் தாங்கியுள்ள வேலானது பன்னிரண்டு தோள்களுக்கும் பொன்னாபரணமாகும். வள்ளி, தெய்வானையின் கண்களாகும். கொடிய காலன் வரும்போது அன்பு நிறைந்த தொண்டர்களுக்கு நல்ல துணையாகும்.

### 9. கலி - விருத்தம்

கணங்களின் தலைவராகிய கணபதியின் இளையவனும், திருச்செந்தூரில் இருப்பவனும், செந்தமிழ்ப் பாமாலைகளைத் தாங்கும் உயர்ந்த தோள்களை உடையவனும், ஆகிய வள்ளி மணாளனே! படைபோல் தாக்கும் விழிகளையுடைய மாதர்களின் மையல் என்னும் நோயால் தாக்கப் படுவதல்லாமல், உன் கடைக்கண் அருளால் பரகதி பெறும் வழியும் உண்டோ?

### 10. குறளடி வஞ்சிப்பா

குளிர்ந்த நிலவு தாரகைகளுடன் மேகங்களிடையே போரிடு வது போலச் சங்குகளையும் நவமணிகளையும் வழங்கும் ஆரவார மிக்க கடலலைகள் நிகர்த்த முரசொலியுடன், பைந்தமிழ் சிறந்து விளங்கும் திருச் செந்தூரிலுள்ள முருகவேளின் செவ்விய திரு வடியைத்துணையென நம்பிச் சேர்பவர்கள், எவரும் புக அரிய தாகிய முத்திநெறியைப் பெறுவார்கள்.

### 11. கலிப்பா

எழுதிய சித்திரத்தில் உள்ள நட்சத்திரங்களைப் பொரி யென்றெண்ணிக் கொத்திக் கொறிக்கும் அழகிய கால்களைக் கொண்டதும் படையை எதிர்த்துத் தாக்க வல்லதுமான சேவலைக் கொடியாகக் கொண்டவனே! சிலிர்த்துச் சுருண்ட தலை மயிரை யுடைய எமன் என் உயிரைப் பறிக்க எதிர்ப்படும் காலத்தில் மிகுந்த சித்திகளைத்தரும் உன்னுடைய திருச்செந்தூர் என் புத்தியில் பொருந்தியிருக்க வேண்டும்.

(நெறிக்குஞ்சி-சிலிர்த்த, சுருண்ட தலைமயிர்; செறிக்கும்-மிகுந்த; சரணம்-கால்)

## 12. வண்டோச்சி மருங்கணைதல்
## ஆசிரிய விருத்தம்

*பூங்கொடி போல் நின்று, இடைமெலிந்து, சந்தனக் கலவை பூசிய தனங்களையும் (அடர்ந்த) கூந்தலையும் தாங்கி (பாரம் தாளாமல்) இன்னும் ஒடிந்து விடாமல் உள்ளது. வண்டுகளே! உங்களுக்கும் இரக்கம் இல்லாத மனம் உள்ளதோ? வடிக்கப்பட்டதும் இலை போன்றதுமான வேலை வெற்றியுடன் ஏந்தியுள்ள முருகனின் திருச்செந்தூரில் உள்ள (என் காதல் நோய்க்கு) அரிய மருந்து போன்றவளின் கூந்தலில் தங்கி இருந்து 'அளி' என்னும் சொற்பொருள் நிறைவடையாதபடி நீங்கள் அநுராகத்தை (இன்ப நுகர்வை) முயல்கின்றீர்களே!*

*(கலவை-சந்தனக்குழம்பு, குழல்-கூந்தல்; வடியாநின்று-வடித்து; வலன்-வெற்றி; முடியாநின்று-கூந்தலில் இருந்து; அளி-வண்டு, அருள் (இரு பொருளில்)*

## 13. வண்டு விடுதூது
## வெளி விருத்தம்

*வண்டுகளே! (தாமரை) மொட்டுப் போன்ற இளமை வனப்பு மிக்க தனங்கள் கொண்ட பசலையை நீக்கி அருளுங்கள். தெய்வப் பெண் போன்றவள் தன் விழி நிறைந்த துணையைப் பெறுவதற்கு அருளுங்கள். பூந்தண்டுடைய மெல்லி தாமரைப் பொய்கை சூழ்ந்த திருச்செந்தூருக்குச் சென்று, இவள் நுகரும் வண்ணம் அன்றலர்ந்த வேங்கைமலரைக் கொண்டு வந்து தாருங்கள்.*

*(முகை-மொட்டு; பசப்பு-பசலை நோய் (விரகத்தால் ஏற்படும் நிறமாற்றம்; ஆர்-தெய்வப்பெண்; நாரம்-நூல்; நாளம்-பூந்தண்டு; நளினம்-தாமரை.)*

## 14. வஞ்சித்துறை

*நெஞ்சே! வண்டுகள் பாடும் சோலைகள் சூழ்ந்த, ஒளியும் பெருமையும் மிக்க திருச்செந்தூரைத் தியானித்துத் தெளிவாயாக அழியாத முத்தியாகிய வீடு (நிச்சயமாக) உண்டு*

## 15. மேகவிடு தூது
## கலித்துறை

*மேகங்களே! நீங்கள் கடல் நீரைப் பருகி பசுமையான சிறகு களையுடைய கிளி, மயில் உருவங் கொண்டு எட்டுத்திசைகளிலும் பதிந்து (முருகனின்) வேல் போல் மின்னி இடியாக முழங்குவீரா யின் நான் கண்டு கண்களும் உள்ளமும் மகிழ்ச்சி மிகும் வண்ணம் செந்தில் வாழ்குமர வேளை (என்னிடம்) கொண்டு வந்து சேர்ப்பீராக*

*(வாரிதி-கடல்; சிறை-சிறகு, அயில்-வேல்; கொண்டல்காள்-மேகங்களே; கொணர்வீர் கொண்டு வருவீர்.)*

### 16. அம்மானை
### மடக்குத் தாழிசை

*வீரனும் நெடிய வெள்ளிய வேலையுடைய வனும் பெருமை மிக்க திருச்செந்தூரில் வாழ்பவனும் ஆகிய எங்கள் பெருமானாகிய முருகன் உலகில் உள்ள உயிர்களை யெல்லாம் படைத்தான்.*

*உலக உயிர்களை யெல்லாம் படைத்தான் என்றால் வேதங்கள் நான்கையும் அறிவானோ?*

*வேதங்களை யறிந்து பிரமனைச் சிறையிலிட்டான் காண்.*

*(அம்மானை என்பது கழற்சிக் காய்களைக் கொண்டு பெண்கள் ஆடும் விளையாட்டு. ஒருபெண் கேள்வி கேட்க மற்றொரு பெண் பதில் கூறுவதாக அமையும்.)*

### 17. இரங்கல்
### வஞ்சி விருத்தம்

*மான் மகளாம் வள்ளியின் காதலரும், மேகங்கள் தவழும் தேன் மிகுந்த சோலைகள் மிக்க சிறந்த திருச்செந்தூரில் வாழ்பவரும் ஆகிய குமரவேளின் திருவடியில் உள்ள கடப்பமலர்களாவது நறுமணம் வீசும். ஆனால் நான் மகிழ்ச்சி மிகப் பெறும்படி இரங்கவில்லையே.*

*(மான் மகள்-வள்ளி; மஞ்சு-மேகம்; கா-சோலை; கூர்தல்-மிகுதல்.)*

### 18. ஒரொலி வெண்டுறை

*கரியமேகம் போன்ற நிறமும், கொடூரமும், கோபமும், உடைய கடுமையான காலன் நம்மைப் பற்றவரும் போது யார்தான் அதை விலக்க முடியும்? அந்தோ! நம்மவர்களே, இதனை யறிவீராக. நீங்களே (உங்கள் சாமர்த்தியத்தால் தப்பி) வாழ்ந்து விட முடியுமா? ஒரு முகமாய் நின்று நினைப்பீராகில், கூரிய வடிவேற் குமரன் எழுந்தருளியுள்ள குட நாட்டுப் பகுதியில் உள்ள சிறப்புமிக்க திருச் செந்தூர் சென்று தொழுவீராக.*

*(கார்-கரிய மேகம்; தறுகண்-கொடூரம்; கறுவு-கோபம்; கூற்றம் -எமன்; நமரங்கள்-நம்மவர்கள் வலித்தல்-நினைத்தல்; சீர்ஏய் - சிறப்புப் பொருந்திய)*

### 19. வெண்பா

*மிகுந்த ஒலியெழுப்பும் கடலானது மணிகளை வாரியிரைக்கும் திருச்செந்திலில் எழுந்தருளியுள்ள குகனை வணங்கித் தொழாதவர்கள், எவ்ரையும் கும்பிட்டு, யாசித்து, கொடிய பசியால் தளர்ந்து போவார்கள்; (எதற்கும்) பிறர் கையை எதிர்பார்த்து) அழுது, வருந்தி, ஏங்கி அலைவார்கள்.*

*(இரந்து-யாசித்து; அலமந்து-வருந்தி; கன-ஒலி; வாரி-கடல்;)*

### 20. கலிப்பா

*அடியார்களுக்கு வழங்கும் வரங்களைத் தன்னகத்தே கொண்ட உமையின் முலைப் பாலின் நறுமணம் கொண்ட (முருகனின்) சிவந்த வாயும், (முருகனாகிய) பரம்பொருளைத் தன் மேற்கொண்ட மகிழ்ச்சி மிக்க மயிலும், பன்னிரண்டு விழி மலர்களும், உயர்ந்த வேதங்கள் தொழும் சிவந்த திருவடியும், திருச்செந்தூர் முருகன் திருக்கரத்திலுள்ள வேலும் ஒரு போதும் என் கண்களை விட்டு அகலமாட்டா.*

*(களி-மகிழ்ச்சி; சிரம்-உயர்வு, மேன்மை;)*

### 21. பாண்
### கலித்துறை

*தலைவனுக்குத் துணையான பாணனே! நீங்காத விருப்பத்தில் நீதைத்த தையல் உன்னையல்லாமல் தைக்கும் ஊசியின் திறமை தப்பியதால் பிரிந்தது என்னும் போது, திருச்செந்தூரில் உள்ள உமைமைந்தனை நாங்கள் காணவில்லை என்றால் எங்களைக் கேட்கிறாய். மற்றவர்கள் உன்னுடைய அறிவைச் சகித்துக் கொள்ள மாட்டார்கள்.*

*(ஏதிலர்-மற்றவர்கள்; துன்=தைக்கும்; திறம்-திறமை)*

### 22. ஆசிரிய வண்ண விருத்தம்

*சிறிய வாய் திறந்து சங்குகள் வருத்த முற்றுச் சந்திரன் என்னும்படி முத்துகளைப் பொழிய, மேகம் போல் முழங்கி அலைகள் மிக்க கடலானது சங்குகளை எறியும் வளம் பொருந்திய திருச்செந்தூர் என்னும் திருத்தலமே, பிழை புரியாத தொண்டர்கள் காட்டும் அன்பு சிறிதளவே எனினும் அதனைப் பெரிதாகக் கருதி உள்ளம் மகிழ்பவரும், மான் ஈன்ற எங்கள் குறமகள் வள்ளியின் கணவரும் உமைந்தரும் ஆகிய முருகவேள் தங்கியிருக்கும் இடமாகும்.*

*(உழை-மான்; கொண்கர் - கணவர்; புழைவாய் - சிறியவாய்; வளை - சங்கு; உழைந்து - வருந்தி; ஆரம் - முத்து இந்து - சந்திரன்; ஆழி-கடல்)*

**23. தலைவி கூற்று**
**வெண்பா**

*(ஒளியென்னும்) நகை காட்டும் நிலவே, உள்ளம் மகிழ்ந்து மகளிர் நிறை என்னும் கற்பின் இருப்பிடமான பார்வதி தேவி தந்தருளிய முருகவேள் கடற்கரைத் தலமான திருச்செந்தூரில் எமக்குப் பொன்னிறப் பசலை தந்தார். அவர் முன்போய் இவ் வாறு வடவா முகாக்கினியின் கொழுந்து போல் வாட்டும் தன்மை யுள்ள நிலவாய் நின்று நெருப்பைப்போல் ஒளி சிந்துவாயாக.*

*(தகை-வாட்டுகின்ற; தழல்வாய்-நெருப்புப்போல் பொழிவாய்; கற்பசலை-கற்பு அசலை-பார்வதி; பொற்பசலை-பொன்னிற முள்ள பசலை.)*

**24. கலித்துறை**

*(பத்தியுடன்) சென்று வதனாரம்ப தீர்த்தத்தில் நீராட மாட் டார்கள். திருச்செந்தூர் சென்று தங்க மாட்டார்கள். முருகனின் மலர் போன்ற திருவடிகளைத் தியானிக்க மாட்டார்கள். திருமால் மருகனின் அல்லது இலட்சுமியாகிய மானின் மருகனின், பகை வரை அழிக்கும் சினமிக்க வேலும் மயிலும் என்று சொல்ல மாட்டார்கள். கடல் சூழ்ந்த இவ்வுலகில் இப்படிப்பட்ட பேயறிவு படைத்தவர்கள் எவ்வாறு தங்கள் பிறப்பை அறுப்பார்கள்?*

*(வதனாரம்பம்-செந்திலில் உள்ள தீர்த்தம்; சேய்-முருகன்; திருமான் மருகன்-திருமால் மருகன்; திருவாகிய மான் மருகன்; காய்-கொல்லும்;)*

**24. தலைவி நெஞ்சொடு கிளத்தல்**
**ஆசிரியத் தாழிசை**

*நெஞ்சே! மற்றவர்கள் அலர் தூற்றிப் பேசும் வசைமொழி அடங்கும்படி சிவன் மைந்தனின் வலிமை மிக்க தோள்களில் அணிந்துள்ள, தேன் நிறைந்த கடப்ப மலர்க்கொத்தினை நாம் பெறவேண்டி அணையை உடைய நீர்ப்பெருக்கு மிக்க திருச்செந் தூர் சென்று சேர்வோம்.*

*நெஞ்சே! குயிலின் குரலொலி அடங்கும் படி நடனமாடும் சிவன் மைந்தனின் உறுதியான தோள்களில் உள்ள, விருப்பத் திற்குரிய கடப்ப மலர்க் கொத்தினை நாம் பெறுதல் வேண்டி குற்றமற்ற, நீர்வளமிக்க திருச் செந்தூரைச் செர்வோம்.*

நெஞ்சே! கடல் ஒலி அடங்கும்படி முக்கண்ணனாகிய சிவன் மைந்தனின் உறுதிமிக்க தோள்களில், பனி நீர் படிந்த கடப்ப மலர்க் கொத்தினை நாம் பெறுதல் வேண்டி, புதுவெள்ள நீர் மிக்க திருச்செந்தில் சேர்வோம்.

(பிஞ்ஞகன்-சிவன்; சேய்-மைந்தன்; வசை-அலர்தூற்றல், நறவு-தேன், மணம், துணர்-பூங்கொத்து; கூத்தன்-சிவன்; நயம்-விருப்பமிக்க; சிறை-அணை; வான் - மிகுதி; செயிர்-குற்றம்; தீர்-இல்லாத; முந்நீர்-கடல்;)

## 26. கைக்கிளை
### மருட்பா

நெஞ்சே! குகப்பெருமானின் திருச்செந்தூர் போன்றவளுக்கு நெற்றிவியர்க்கிறது; அழகிய மீன் போன்ற விழிகள் இமைக்கின்றன; பஞ்சு போன்ற பாதங்கள் நிலத்தில் படிகின்றன அதனால் மண முள்ள கூந்தலுடைய இவள் கடலிடத்தே உள்ள பெண்ணே யாவாள்.

(அஞ்சேல்விழி-அம் சேல்விழி; ஏர்-போன்ற; தோயும் - படியும்; நுதல்-நெற்றி; அணங்கு - பெண்.)

## 27. பாங்கி வேண்டல்
### வெண்பா

அழகு மிக்க இள முருகா! திருச் செந்தூரில் உள்ள எம் தந்தையே! பெண்ணாகிய இவளுக்கு நோயாக (அல்லது) வருத்தம் தர) வருவது ஒளி மிக்க நிலவு ஒன்று மட்டுமோ! தென்றலும் ஒன்று; மனம் உருகும் புல்லாங் குழலிசையும் ஒன்று (எனவே நோயிலிருந்து மீறும் வண்ணம் வந்து ஆட் கொள்வாய்.)

(அவிர்-ஒளி; அணங்கா (க) -நோயாக, வருத்தப்பட; வணம்-வண்ணம்-அழகு; கூர்-மிக்க; வேய்-மூங்கில்)

## 28. தலைவியை வியத்தல்
### கலித்துறை

ஒப்பற்ற ஒன்றாகிய அறத்தைக் காளை வாகனமாக உடையவரும், புலித்தோலை உடையாகக் கொண்டவருமாகிய சிவனார் மைந்தனாகிய முருகன் பெருமை மிக்க திருப்பரங்குன்றத்தைத் தன் இடமாக உடையவன்; திருச்செந்திலில் வாழ்பவன்; அங்குள்ள இவள் குல வாழை போன்ற இளமையும் மென்மையும் கொண்ட தொடையால், நடையால், இடையால், வேல்போன்ற விழியின் கடைக்கண் பார்வையால், (உளங்கவர) நின்றுவிளங்க, எவராயினும் நிலை தடுமாறி உள்ளம் உடைந்து நிற்பார்கள்.

(குலவாழை-ஒருவகை மரம்.)

### 29. மதங்கியார்
### கலித்தாழிசை

குலையீன்று குலுங்கும் வாழையின் குளிர் நிழலில் சூரியனின் தேரில் பூட்டப்பட்ட குதிரைகள், பாயும் அருவியின் தேனுண்டு சோர்வை நீக்கிக் கொள்ளும் சோலை சூழ்ந்த இடத்தில் எங்கள் தந்தையாகிய முருகனின் திருப்செந்திலைப் பாடியாடும் மதங்கியாரின் தனம் குலுங்கினால் மன்மதனின் முடி குலுங்கும். அவர்களுடைய அமுதம் நிகர்த்த வாய்மொழி சிந்தினால் கண்டோர் ஆவி குலுங்கும். இடையிலுள்ள மேகலை குலுங்கினால் நாடு நிலை தடுமாறும். முகத்தாமரை குலுங்கினால் பார்ப்போர் நெஞ்சம் குலுங்கும்.

(மதங்கியார்-இசைக்கும் கூத்துக்கும் உரிய மகளிர்)

### 30. இரங்கல்
### இன்னிசை வெண்பா

இலை போன்ற வேலுடைய முருகனை, அலைகள் எறியும் திருச்செந்தூரில் வலம் கொள்ள முன்செல்லும் இள மகளிரின் குலுங்கும் தனங்களின் மேல் பசலை பாயும்; கண்ணீர் அரும்பும்; மனம் தவிக்கும்; வெட்கமும் கைவளையும் நீங்கும்.

### 31. சித்து - ஆசிரிய விருத்தம்

மகளே! நாங்கள் சித்துவித்தை புரிய மாட்டாதவர்கள் அல்லர்; செந்தில் குகப்பெருமானிடம் நாங்கள் கேட்டறிந்ததை உறைப்போம், கேள். இது பொய்யல்ல; மெய்யே. இன்று உணவு கொள்ள விரும்பவில்லை; மலர்ந்து விளங்கும் தாமரையில் நாங்கள் பொன்னைக் காட்டாவிடில் நீ படைத்துள்ள கறியும் சோறும் எங்களுக்கு வேண்டாம் (செய்ய எளிதான ஒன்றை அரிது எனக் கூறுவது 'சித்து' என்று குறிக்கப்பட்டது) தாமரை மலரின் நடுவில் மஞ்சள் நிறத்தில் உள்ள பொகுட்டு தங்கம் போல் தோற்ற மளிப்பதையே சித்தன் சாமாத்திய மாகத்தங்கம் என்கிறாள்.)

### 32. இரங்கல்
### கலித்துறை

பகைவரின் ஊனைச் சுவைத்து வெற்றி நகை கொள்ளும் வேலவனின் அழகிய திருச்செந்திலில், அவள் விரும்பினளாகில், மேகங்கள் நெருங்கி இடி முழங்கி மழை பொழியும் நாளில் பகைவர் மேல் அம்பு தொடுத்துக் கொல்லப் போர்க் கோலம் பூண்டுள்ள வீரராகிய ஆடவர், மானைப் போன்ற மங்கையரை விட்டுப்பிரிவாரோ?

## 33. பனிக் காலம்
## வஞ்சித் தாழிசை

*அன்றலர்ந்த தாமரை குவிந்து சுருங்க, நெடிய குளிர் தரும் பனிக்காலத்தில், கந்தவேள் வாழும் திருச்செந்திலில் எங்கள் உள்ளம் துணைவரை நினையா.*

*அன்றிற் பறவையோடு அதன்பெடை அணையும் பனிக்காலத்தில் குகப்பெருமானின் திருச்செந்திலில் எம்மை விட்டுப் பிரிந்த துணை வரை நினையோம்.*

*விரகத்தால் தவிப்பவர் மேல் மன்மதன் மலர்க்கணை தொடுக்கும் பனிக்காலத்தில் பார்வதியின் குமரன் இருக்கும் செந்திலில் எம் உள்ளம் எம் தலைவரை நினையா.*

*(நாள்வனசம்-அன்றலர்ந்த தாமரை; வேள்-குமரன்; கேள்வர் - துணைவர்; மகன்றில்-அன்றில் ஆண்பறவை)*

## 34. வெண்டாழிசை

*வினைச்சுழலில் விழுந்தவரிடம் நினைவும் சொல்லும் ஒன்றே. முருகனின் செந்திலைத் தியானித்துத் தொழாமையே.*

## 35. கலிப்பா

*பால் போன்ற வெண்ணீற்றை அணிந்தவனும், பல உயிர்களையும் படைத்தவனுமாகிய சிவனும், வெண்மையான வலம்புரிச் சங்கைக் கையில் கொண்ட திருமாலும், விருப்பு வெறுப்பு இல்லாத ஒப்பற்ற வேற்படையை உடைய முருகனும் மீன்கள் உலவும் பரந்த கடற்கரையில் உள்ள திருச்செந்தூரில் வீற்றிருக்கின்றனர்.*

*(பணிலம் - வலம்புரிச்சங்கு; சால்பு-விருப்பு; எள்ளல் - வெறுப்பு, சேல்-மீன்)*

## 36. கலித்துறை

*திருச்செந்தூரில் வீற்றிருப்பவனே! தென்கலையாகிய தமிழ் முழுவதையும் கும்ப முனியாகிய அகத்திய மாதவருக்கு உபதேசித்த ஞானாசாரியனே! நெஞ்சை இடமாகக் கொண்டு 'சரவண பவ' என்னும் ஆறெழுத்தை தியானிக்கவும், விழி நிறைந்து உன் திருவடியிரண்டை கும்பிடவும், நீ எழுந்தருளியுள்ள ஆறு பதிகளை என்றும் நீங்காதிருக்கவும் எனக்குக் கடல் போன்ற பெருங்கருணை புரிவாயாக.*

*(இடத்தானம்-மனமாகியஇடம்; கண்ணார்-விழி நிறைந்த; தென்கலை-தமிழ்; குடத்தான மாதவன்-கும்பத்தில் தோன்றிய அகத்திய முனிவர்.)*

## 37. மடக்கு
### ஆசிரிய விருத்தம்

*பரந்த கடல் வாழ் சங்குகளே! படரும் பசலை நோயின் மிகுதியைத் தடுப்பீர்களோ! துன்பம் தரும் நாகம் போல் பசலை வருகிறது. புன்னை மரங்களே! நீங்கள் அரும்புங்கள். ஒலிக்கும் கடலில் உள்ள மகர மீன்களே! பாம்பு போல் (நஞ்சைச் சிந்தி) அம்பு போல் வருத்தி நிலவு காய்கிறது. (விரகத்) துன்ப மிகுதியால் அன்னம் (உணவு) வெறுக்கத்தக்கதானது. சங்குகளே! அன்னமே! (அத்)துன்பம்தீர வழி கூறுங்கள். பிரமனின் குளிர்ந்த தலையில் முருகன் குட்டினான். அந்தப் பிரமன் சோலைகளைப் படைத்து விலங்குகளைத் திரிய விட்டான். (அதுகண்டு எனக்கு மயக்கம் உண்டாக்கினான்.) சிவந்த சூரியன் விடியும் பொழுதிலும் தோன்ற மாட்டான். (இரவு நீள்கிறது.) செந்திற்பதி வாழ் முருகன் மான் போன்ற இவளிடம் கருணை பிறக்கச் செய்யமாட்டான். முழங்கும் நாவாய்ப் பறவையும் பிறர் பேசும் அலர்மொழியும் எனக்கு நஞ்சாக உள்ளன. கடற்கரை நாரைகளே! கடல் ஒலி என்னை வருத்தும் தன்மைக்கு (நீங்கள்) இரங்குவீர்களோ!*

## 38. தலைவியை வியத்தல்
### கலிப்பா

*வள்ளி, தெய்வயானை இருவரையும் தாரமாக உடைய முருகனின் திருச்செந்திலைப் போல் விரும்பத்தக்க அழகிய தனங்கள் இரண்டைக் கொண்ட, செருக்குற்ற விழியுடைய தலைவிக்குக் கிளியும் பாலும் ஆகிய இரண்டும் அவள் சொல்லுக்குச் சமமாகும்; மணி மாலையும் முத்துமாலையும் ஆகிய இரண்டும் தாமரை மலர் போன்ற தனங்களின் மேலுள்ள அணிகலனாம்.*

*(கீரம்-பால், கிளி; கிளவி-சொல்; ஆரம்-ரத்னம், மணி முத்து; அணி-அணிகலன்; கூரமலை யோரிரண்டும் - கூர்அமலை ஓர் இரண்டும்-விரும்பத்தக்க மலை போன்ற தனங்கள் இரண்டும்)*

## 39. ஊசல்

*ஆரவாரம் செய்யும் வண்டுகள் ஆட, மாலை யாட, அழகிய இடை அணியும் மேகலாபரணமும் இடையும் ஆட, கச்சணிந்த குவிந்த மென்மையான தனங்களும் அவை மேல் அணிந்துள்ள ரத்ன மாலைகளும் ஆட, சந்திரனைப் போன்ற முகமும், நெற்றி வெயர்வும், மங்கையின் இளநகையும் ஆட (விளங்க) கமலம் போன்ற திருவடியில் அணிந்துள்ள சிலம்புகள் ஒலித்து ஆட, தாழ்ந்த குழைகளும் நீண்ட விழிகளும் ஒன்றையொன்று தழுவி யாட, கூரிய ஒளிமிக்க வேலையுடைய குகப் பெரு மானின் திருச்*

*செந்திலைப் பாடியாடிப் பொன் மகளாம் திருமகளை நிகர்த்தவர் களே! ஊஞ்சலாடுங்கள்.*

*(ஆர்க்கும்-ஒலிக்கும், ஆரவாரிக்கும்; மதுகரம்-வண்டு; வார்-கச்சு; வடம்-மாலை; தார்-மாலை; குழை குழைகள் பெண்களின் காதணி;) கனகம்-பொன்; திரு-இலட்சுமி.)*

### 40. ஆசிரிய விருத்தம்

*குற்றமற்ற நீண்ட கடல் அலைவாயில் உள்ள பரந்த கரையில் வரிச்சங்குகள் ஈன்ற மாசில்லாத வெண்முத்துப் போன்ற திருச் செந்தூரில் எழுந்தருளியுள்ள தேவர்கள் பெருமாளே! ஊஞ் சலைப்போல் போவதும் வருவதுமாக உள்ள பிறப்பு இறப்பு களுக்குரிய உடற்சுமை என்ற அற்பமான வீட்டில் பெருமையில் லாத அற்ப அறிவுள்ள வாழ்க்கையிற்பட்டு இறந்து, இறந்து அழிந்து போவேனோ?*

*(பொறை-சுமை; தேசு-பெருமை; புல்லறிவு-அற்ப அறிவு; காசு-குற்றம்; தடங்கரை-பரந்துள்ளகரை; மாசு-களங்கம்; ஏய்-போன்ற)*

### 41. களி
### தாழிசை

*பெருமையுடன் உலகம் முழுவதையும் வலம் வரும் தோகை களையுடைய சிறந்த மயில்வாகனப் பிள்ளையார் (முருகன்) எழுந் தருளியுள்ள திருச்செந்தில் என்னும் தலத்தில் உள்ள மதுவுண் போர் நாங்கள். சிவசக்தி (பராசக்தி) மனோன் மணி, புவனேஸ்வரி, நாராயணி, நெற்றிக்கண்ணுடையவள், சூலி, சம்புவின் மனைவி, சுகாசனி, கௌரி பூஜை செய்கையில் உள்ள மகிழ்ச்சி எளியதா? (அல்லது உண் மகிழ்வு-மது உண்ணும் இன்பம் சாதாரணமா? வாம மார்க்க சைவத்தில் சக்திவழி பாட்டில் மது உண்பர். இது வாமாசாரம் என்பர்). பன்றியும் மீனும், ஆமையும் மாயனாகிய திருமாலுக்கு விருப்பமானவையாம். ருத்திரன் (சிவன்) மானைக் கைவிட மாட்டான். சந்திரன் தினமும் முயலுண்பான். வேள்வியில் அந்தணர்கள் பசுவைக் கண்டால் ஒருவரையொருவர் முந்திச் செல்வர். ஐயனே! சுராபானம் அருந்தியதால் வானவர் யாவரும் சுரர் ஆயினர்*

*(மதுவுண்போர் தங்களை நியாயப்படுத்தச் சாமர்த்தியமாகப் பேசுவதாக அமைந்து இப்பாடல்.)*

### 42. வேற்றொலி வெண்டுறை

*எவரும் தன் திருவடிகளை வணங்கும் எங்கள் பெருமானும் யானை முகனுக்கு இளையவனும், திருச்செந்தூரில் உள்ளவனும்*

(பகைவர்க்கு) அச்சமூட்டும் ஒளியுடைய வடிவேலைக் கொண்டவனும், கொத்தாகிய கடப்பமாலையை அணிந்தவனு மாகிய குமரவேளைத் தொழாதவர்கள், கடல் சூழ்ந்த உலகில் நோயாலும், பசியாலும் தளர்ந்து சிறப்புக்குன்றி வாழ்நாள் குறைந்து உரிமையுடையார் அனைவரும் இகழ, உணர்வோடு உயிரும் பிரிந்து தீ யெரியும் நரகத்தில் மூழ்குவார்கள்.)

(தும்பிமுகன்-யானைமுகன்; சூர்-அச்சம்; வியன்-பெருமை; மேதினி-உலகம்; பரிவு-இரக்கம்; ஒசிதல்-தளர்தல்; கழிதல்-குறைதல்; எரி-நெருப்பு, நிரையம்-நரகம்.)

### 43. கலித்துறை

புதிய நீரை விரும்பி மீனானது மதகுக் கதவின் வழியே ஆற்றைக் கடந்து சென்று, நீரில்லாமையால் இறந்தது போல் உன்னையல்லாது, வேறு தெய்வத்தை நினைத்து நான் உள்ளம் சோராமல், செந்திலில் உள்ள, யாம் விரும்பும் இனிய மொழியுடைய வள்ளி மணாளா! உள்ளம் இரங்குவாய்.

(வேட்டு-விரும்பி; பழந்தாழ்-பழைய மதகக்கதவு, வீழ்-குறையும்; காமுறும்-விரும்பும்.)

### 44. இரங்கல், இதுவுமது

இரங்கி உடல் தீய்ந்து பெருஞ்சிறைப்பட்டுத் துன்பத்தில் மூழ்கி, கண்ணீர் சிந்தி, வெட்கப்பட்டு வருந்திய வரிவண்டுகளே! கரிய விழிகளையும் கச்சணிந்த தனங்களையும் உடைய கௌரி யின் மைந்தன் திருச்செந்திலில் எங்களை விட்டுப் பிரிந்தான் அத்துடன் உங்களையும் பிரிந்தனனோ?

(மறுகிய-வருந்திய; ஒழிதல்-பிரிதல்.)

### 45. சிந்தியல் வெண்பா

நீர்வளமுடைய சேந்தனின் (முருகனின்) திருச்செந்திலைச் சேர்ந்து (அதன் பயனாக) துன்பங்கள் ஒழிந்தன; உள்ளம் மகிழ்ந்தது; நம்முடைய (முந்தை) வினையாவும் நீங்கின.

### 46. இரங்கல் - ஆசிரிய விருத்தம்

கூடியபோது குளிர்ந்தும், பிரிந்தபோது வெம்மையடைந்தும், வான் வழியே (மயில் மீதேறி) சஞ்சரித்து, கந்தவேள் விரும்பிய திருச்செந்தூரில் (கடற்கரையில்) ஒதுங்கும் வெண்சங்குகள் போல், பரவும் இருளைப் பிளந்து விழுங்கி எங்கள் அங்கங்களெல்லாம் நடுங்கும் படி கொடிய பனியைச் சிந்தி முந்திவந்து நிலவு வெப்பத் துடன் எழுந்தது.

*(பணிலம்-சங்கு; ஈர்ந்து-பிளந்து; நுங்கி-விழுங்கி; இந்து-நிலவு.)*

### 47. இதுவுமது

*சந்திர சூரியர்கள் உலவும் இவ்வுலகில், (தேவர், மனிதர், விலங்கு, பறவை, நீர் வாழ்வன, ஊர்வன தாவரம் என) ஏழு வகையான பிறவியில் அதற்கேற்றவாறு ஒரு உடலைப்பெற்று மங்குதலை ஒழிப்பேனோ? திருச்செந்திலிலும் என் இரு விழி களிலும், அடியார்கள் உள்ளத்திலும், அரிய வேத முடிவிலும் மகிழ்ச்சியுடன் எப்போதும் உலவும் அம்பிகையின் திருக்கு மாரனே (உரைப்பாய்.)*

*(இந்து-சந்திரன்; இரவி-சூரியன்; இம்பர்-இவ்வுலகம்; சந்ததம்-எப்போதும்.)*

### 48. கலித்துறை

*(நற்கதி பெற) முயல்பவர்க்கு இந்திரனின் அரச போகமும் அழிவில்லாத உடலும், உலக வாழ்க்கையும், பிற அனைத்தும் பொய்யேயாம். தமிழ் வழங்கும் திருச்செந்திலை யடைந்து உள் ளக்கமலம் மலர்கைகளைக் கூப்பி நின்று ஆறுமுகமான பரம் பொருளைப் பணிவது ஒன்றே மெய்யாகும்.*

*(மகவான்-இந்திரன்; யாக்கை-உடல்; மன்பதை-உலகம்; அகவாரிசம்-உள்ளக் கமலம்.)*

### 49. கலித்தாழிசை

*(ஒரு செயலில்) முயல்பவர்களின் முயற்சி முடியமுன்னே உபாயத்தை நன்குணர்ந்த திருச்செந்தில் முருகவேள் அனைத் தையும் தருவான். முருகன் வழங்கவில்லை யெனில் வேறு எந்த தேவரும் அதைத் தருவதற்கு வல்லவர்அல்லர்.*

### 50. குறட்டாழிசை

*கந்தவேளின் விழாக்கள் நிறைந்த அழகிய திருச்செந்தூர் சென்று வாழ்த்தி வணங்காதவர்கள், அன்றல்ல, இன்றும் துன்பம் அடைவர்.*

### 51 இரங்கல், அடிமறிமண்டில ஆசிரியப்பா

*தாம் அணிந்துள்ள குளிர்ந்த மாலையைத்தர மாட்டாரோ? (என்னை நாடி) வாராரயினும், மான் நிகர்த்தவர்களே! பெருமை மிக்க செவ்வேளும் திருச்செந்தூரரும் ஆகிய முருகவேள் பனி படும் குளிர் நாளில் என்னைப் பார்க்க மாட்டாரோ?*

## 52. பாங்கி கூற்று
## வஞ்சி விருத்தம்

*அவரும் (முருக வேளும்) அங்குள்ளார்; அன்பினால் (ஆர்வத்துடன்) இவரும் (தலைவியும்) மனம் வாடினார். சிவன் மைந்தன் வாழும் திருச்செந்தூரில் இன்பம் விளைய எவர்தான் என்ன செய்வர்?*

## 53. ஆசிரிய வண்ண விருத்தம்

*(வண்ண விருத்தம் என்பது சந்த ஓசையழகுடன் அமைந்த விருத்தமாகும்.) திருப்புகழ்ப் பாடல்கள் யாவும் வண்ண விருத்தங்களேயாம். இப்பாடலும் சந்த நயத்துடனும் மெல்லிசை வண்ணத்துடன் கூடியதாகும். இப்பாடல்,*

*"தந்தனந் தந்தனந் தந்தனந் தந்தனந் தந்தனந் தந்தனந் தனதான" என்ற சந்தக் குழிப்பில் அமைந்துள்ளது ஈற்றில் பெருமாளே என்று திருப்புகழ் போலவே முடிந்துள்ளது. அதனால் திருச்செந்தூர்த் திருப்புகழ்ப் பாடல்களைத் தொகுத்தவர்கள் யாரோ, இப்பாடலையும் திருப்புகழ் எனக் கொண்டு சேர்த்து விட்டார்கள். திருப்புகழை ஆராய்ந்து தொகுத்த தணிகை மணியார் அவர்கள், இது திருச்செந்திற் கலம்பகப் பாடல் என்றறிந்து நீக்கியுள்ளார். (முருக வேள் பன்னிரு திரு முறை-தொகுதி-ஒன்று -இரண்டாம் பதிப்பு 1952-பக்: 138. பா.எண் 54.)*

*இன்பமும் துன்பமும் சஞ்சலமும் கொண்டு தளர்ந்து அங்கும் இங்கும் சுற்றிச் சுழன்றிடும் மாயமான, துன்பமான கொடிய நரகத்தில் இருந்து தப்பி உன்னுடைய பெரிய தொண்டன் என்று உய்ந்து உளம் விடுபடுவேனோ? புன்கு, குருந்து முதலிய மரங்களை உந்தித்தள்ளி சந்தனத்தைச் சிந்தி வெண் சங்குகளை வீசவும், தம்பகமரம் பொன் சொரிந்தது போல் மலர்களை எங்கும் சிந்தும் தென் செந்திலம்பதியில் எழுந்தருளியுள்ள பெருமாளே.*

*(கும்பி-ஒருவகை நரகம்; கழிவேனோ-விடுபடு வேனோ;)*

## 54. கார் கண்டு பாகனொடு கழறல்
## இதுவுமது

*தலைவனும் சந்திரனைத்தரித்த சடையையுடையவனுமாகிய சிவனுடன் இருக்கும் பெண்மானைப் போன்ற அம்பிகை அருளிய திருச்செந்தூரனின் (முருகன்) கரிய பெரிய மயிலைப் போன்று விளங்கும் கரிய மழை மேகத்தைக் கண்டால், ஒப்பற்ற ஒரு மான் போன்ற என் தலைவி விழி நீர் பெருக்குவாள்; அல்லது உயிரையே விட்டுவிடுவாள்; நான் (மீண்டு) வருவதை அவள்*

*அறியமாட்டாள்; (ஆகையால்) சாரதியே! நீ தேரை விரைந்து செலுத்துவாய்*

*(வலவன்-சாரதி, தேரோட்டி)*

### 55. சிந்தடி வஞ்சிப்பா

*தேரில் வலம் வரும் சூரியன் செல்ல வழியில்லாமல் வருந்தும்படி செறிந்து வளர்ந்த சோலையிலுள்ள மலர்களிலிருந்து வடிந்த தேன் வெள்ளம் கலந்த நீர்வளம் மிக்க வயல்கள் சூழ்ந்த திருச்செந்தூர் முருகனை நினைக்காதவர்கள் யாராயினும் எழு வகையான பிறப்பிலும் பிறந்து காற்றாடி போற் சுழன்று மிகுந்த துன்பப்பட்டு அழிவார்கள்.*

*(தேராதவன்-தேர் ஆதவன்; மறுகிய-வருத்தமுற்ற அவலம்-துன்பம்; நனி-மிகவும்)*

### 56. வண்டு கலித்துறை

*வண்டுகளே! இயல்பாகவே சேரும் குறிஞ்சி நிலத்திற்கு உரிய கடவுளை (முருகனை) அவன் இளையவன் என்னும் தன்மையைக் கேளாதவராய்த் தொழுவதற்காக அன்புடன் திருச்செந்திலுக்குச் சென்று, கண்ட, தோகை மயில் போன்ற சாயலுடைய பெண்களுக்கு, வருத்தம் தராத மயக்கமும் நினைக்காத உள்ளமும், மேனி பசலையடைதலும், தவறவிடாத வெட்கமும் எங்குண்டு? (சொல்வீராக.)*

*(உழவாத-வருந்தாத; மம்மர்-மயக்கம்; உருப்பசப்பு-மேனி நிறமாற்றம்; இழவாத - தவற விடாத;)*

*கிழவானவனை- 1. கிழவான் அவனை, 2. கிழ வானவனை*

*(கிழவானவன் என்பதற்கு உரிமையுள்ள கடவுள் என்று பொருள். கிழமை-உரிமை ஆனால் பெண்கள் கிழ வானவன் - என்பதைக் கிழவனாகிய (முதியவன்) என்று கருதிவிட்டார்கள் என்கிறார் கவிஞர்.)*

### 57. வெண்பா

*தோகை மயிலின் மேல் (வீற்றிருக்கும்) உன் திருவடிகள் இரண்டும் நீக்குவதற்கு அரிய வினைகளையுடைய அடியேன் (அவை நீங்கி) மகிழ்ச்சி என் உள்ளத்தில் நிலைத்திருக்கச் செய்ய இயலாதோ? பாக்குமரங்கள் நிறைந்த, தேன் பாயும் சோலைகள் (வனங்கள்) சூழ்ந்த திருச்செந்தில் நகரில் எழுந்தருளியுள்ள கடப்ப மாலையை அணிந்துள்ள முருகா! நீயே எனக்குப் புகலிடம்.*

(ஓகை-மகிழ்ச்சி; அகம்-உள்ளம்; ஒண்ணாதே-இயலாதே? (இயலும் என்றபடி; பூகம்-பாக்குமரம்; தேங்கடம் பாய் செந்தில்-தேம்+கடம்+பாய்+செந்தில்; புகல்-புகலிடம்)

### 58. இடைச்சியார் கலிமுரி

வெண்ணிலவைப் போல் நகைத்துச் சிவந்தவாய் மலர்ந்து தெருவெல்லாம் சென்று பசும்பாலை விற்கும் இடைச்சியர்கள், குடம் போன்ற தனங்களின் பாலையல்லாது, சிவன் மைந்தன் வாழும் திருச்செந்திரில் ஒளியும் கூர்மையும் கொண்ட நெடுங் கண்ணையும் நெஞ்சத்தையும் விற்றால் இனி யார் விலை கொடுத்துக் கொள்வார்கள்?

(தகல்-தகதி; அகலும்-அகன்ற; ஒளி,கூர்மை; மறுகு-கடைத்தெரு; இகலும்-போரிடும்;)

### 59. தலைவிகூற்று-ஆசிரிய விருத்தம்

தேன் சிந்தும் கடப்பமாலையணிந்த திருச்செந்திற் கந்தவேளின் வேல் போற் சினந்த அம்புகள் பாயும் போர்க்கள ஒலியைக் கேட்டே அகன்றுவிட்ட வீரர்கள் மணம் விரும்பிச் சோர்ந்து நிற்பவர்கள் எங்கள் குலத்தவர் வலித்துக்கட்டிய முரசு முழங்கும் ஒலியைக் காதில் கேட்பரன்றோ!

### 60. ஆசிரிய விருத்தம்

'சரவணபவ' என்னும் ஆறெழுத்தை உள்ளத்தில் நிலை நிறுத்தி, ஐந்து புலன்களையும் (தீநெறிச் செல்லாதபடி) அடக்கி, ஆசையை ஒழித்து, ஒப்பற்ற நெறியாகிய முத்தி நெறியைத் தேடி, உள்ளம் நெகிழ்ந்து, உருகி உட்கொள்ளும் அன்புடைய அடியாருக்கு (என்றும்) பேரானந்தம் தரும் ஞானப்பெருங்கடலே! (அசுரர்களைக் கொன்று அதனால்) கழுகுகள் எழுந்து பேரொலி எழுப்பும் வண்ணம் இரத்தக் கடலை உருவாக்கிய, சூரியனைப் போல் அழகாகச் சுடர்விடும், இலை போன்று அகன்ற நெடிய வேலைக் கொண்ட இறைவனே! மணங்கமழும் மலர்களின் குளிர்ந்த தேன் வயல்களிற் பாய்கின்ற, பசுமையான தமிழ் வழங்கும் திருச் செந்திற் கடவுளே! அழகிய இளந்தேமல் படர்ந்ததும், சந்தனக் கலவையும் கஸ்தூரியும் (குங்குமக்) குழம்பும் பூசியதும், மதம் பாய்வதும், உறுதியான துதிக்கை உடையதும் ஆகிய யானையின் தந்தம் போன்ற முலைகளின் மேல் அணிந்துள்ள அணிகலன் களும் மணங்கமழும் கூந்தலும் இழைக்கப்பட்ட ஆபரணங்களும் அணிந்துள்ள மாதர்களின்பால் மயக்கம் கொண்டு வருந்தி உழன்று வீணில் நாளைப் போக்கி துன்பக்குழியில் கிடக்கும் நான் நற்கதி பெறும்வழி உள்ளதோ!

(பசலை-தேமல் (ஒரு வகை அழகு); கலவை-சந்தனக் கலவை; மான்மதம் - கஸ்தூரி, சேறு-குழம்பு; மதக் கலுழி-மதமாகிய வெள்ளம்; புழக்கை-துதிக்கை; மருப்பு-தந்தம்;)

## 61. இதுவும் அது

வளைந்த இளம்பிறை தோயும் மாடங்களின் மேல் நிலைகளும், கொடிகளும், மணிகள் பதிக்கப்பட்ட மதில்களும் சூழ்ந்த திருச்செந்திலில் வண்டுக் கூட்டம் மொய்க்கும் மாலை களை மிகுந்தணிந்த சிவந்த சுடர் வேலாயுதத்தையுடைய முருக வேளே! ஐம்பூதச் சேர்க்கையால் உண்டான இந்த மாமிச உடம்பை யெடுத்து உழலுதல் நாய் போன்றவனாகிய என்னுடைய ஊழ்வினைப் பயனே யன்றோ? (இதிலிருந்து விடுபட அருள்வாய்)

(நெற்றி-மாடங்களின் மேல் நிலை; தேனினம்-வண்டுக் கூட்டம்; மல்கும்-மிகுந்த, நிறைந்த;)

## 62. கார் கண்டு பாகனொடு கழறல்
## இணைக்குறள் ஆசிரியப்பா

ஆலின் கீழ் தட்சிணா மூர்த்தியாக அமர்ந்த சிறந்த சிவன் மைந்தன் முருகன் எழுந்தருளியுள்ள, மீன்கள் நிறைந்த வயல்கள் சூழ்ந்த திருச்செந்திலில், மேகங்கள் (முருகனுடைய) வேலைப் போல் மின்னலொடு விளங்கி, கருக்கொண்டு கடல்போல் முழங்கித் திருமாலைப் போல் கருநிறங்கொண்டு காற்றைக் காட்டிலும் விரைந்து சென்று வானிற் பரந்து பாலைப்போல் வெண் துளிகளைச் சிதறி மழையைப் பொழிந்து வானவில்லை வளைக்கும். கல்வி நலமிக்க பாகனே! நூலினும் நுண்ணிய இடை யுடைய தலைவியின் நிறை இனி என்ன ஆகுமே!

(கிளர்-பிரகாசிக்கும்; துவன்றி-விளங்கி; ஆல்-கரு; கால்-காற்று; மேல்-வானம்; கோல் -ஐப்பசிமாதம்; கொண்மூ-மேகம்; உயங்கு-வருந்தும்; தகவு-கற்பு; நிறை)

## 63. இரங்கல்
## ஆசிரிய விருத்தம்

பரண்களே! தினைப்புனங்களே! கிளிகளே! வயல்களிற் பறந்து திரியும் குயில்களே! தனக்கு ஒரு உவமையில்லாத (யானைக்கு) விநாயகருக்கு இளையவனாகிய முருகனின் திருச்செந்திலிலும் என மனக் கோயிலும் இடங்கொண்டு, முருகனுடைய திருவடிகள் இரண்டையும் வணங்காதவரோடு நட்புக் கொள்ளாதவராய், எனக்கு ஒரு உறுதிமொழியும் சொல்லாதவராய், இங்கிருந்த மான் போன்ற மங்கையர் எங்கே மறைந்து விட்டனர்?

*(தந்தி-யானை (விநாயகர்); இதண்-பரண்; ஏனல்-தினைப் புனம்; கோகிலம்-குயில்;)*

### 64. தழை
### கலித்துறை

*மான் போன்ற விழியுடைய மான்மகளாகிய வள்ளியின் காதலராகிய முருகன் வாழ்கின்ற திருச்செந்தூரில் உள்ள ஊன் தோய்ந்த வேல் கொண்ட வீரனே! தேவர் விரும்பும் தழை தந்தாய்; (அதனால்) காடு போல் அடர்ந்த கூந்தலுடைய தலைவி யின் உயிர்தந்தாய். இதற்கு மேல் சொல்ல வார்த்தையுண்டோ?*

### 65. மறம்
### ஆசிரிய விருத்தம்

*கொடிய எமன் எங்களைக் கண்டால் நடுங்கி மனம் பதறு வான். கடல் சூழ்ந்த திருச்செந்திலில் வண்டுகள் ஒலிக்கும் கடம்ப மலர்கள் நிறைந்த முருகனின் மலர் போன்ற மென்மையான திருவடியை மறக்காத மறவர்களே நாங்கள் பெண்ணால் உள்ளம் மயங்கி உயிரைவிடத் (துணிந்து) தூது விடும் உங்கள் தலைவனுக்குச் செய்யும் தொண்டால் எங்களுக்குத்தூது சொல்ல வந்துள்ள தூதனே! வலனுக்கு (வலாசுரனுக்கு) எமதூதன் நீயே தான்.*

### 66. தலைவனையே வேண்டல்
### வெண்பா

*(தலைவ!) புகழ்ந்து பேசப்படும் செந்திலில் உள்ள நீ வெம் மையை வீசுவதால் (அக்கினிப் பொரிகளாய்த் தோன்றியவன் ஆத லால்) பன்னிரண்டு திருக்கரத்தவனே! உன்னை வேங்கை என்று கருதி வெறுத்து, நாங்கள், தூது சொல்ல வேண்டி வண்டையும் மானையும் மங்கையையுமே அனுப்பினாலும் தூது சொல்ல மாட்டா.*

*(சுரும்பு-வண்டு; காங்கை-வெப்பம்; வேங்கை-வேங்கை மரம்,புலி;)*

### 67. இரங்கல்
### கலித்துறை

*(அன்புடன்) தியானிப்பவர்களின் வினைகளை முற்றும் அழிக்கும் திருச்செந்திலில், என்பால் ஆசை மிகுந்தவர் அவர் என்னை வெறுக்க மாட்டார். (என்தலைவர்) மின்னலை நிகர்த்த பெண் எனில் கொடிய பிழையும் பொறுப்பார்; மறந்தும் கூடப் புறக்கணிக்க மாட்டார்; கூடி(யின் பம்தந்து) என் உயிரை உள்ளே நிலை நிறுத்துவர். ஊடலாகிய பிணக்கை நீட்டிக்க மாட்டார்.*

*புறங்கணியார்-புறக்கணிக்க மாட்டார்; நிறுப்பார் நிலை நிறுத்துவார்; புலவி-ஊடல் என்னும் பிணக்கு; அலைப்பவர்-வருந்துபவர்.)*

**68. எழுதரிதென்ன ஏந்தலை விலக்கல்**
**கலித்தாழிசை**

*சிவந்தநிற வேலுடையவனே! அலை முகத்தில் வளமையான சங்குகள் ஊர்வதும் இள நிலாக் காய்தலும், ஆகிய திருச்செந் தூரில் நிலைத்து வாழும் கதிர் வேலவனுடைய குட நாட்டில் வாழும் அன்னத்தைப் போன்ற மனையாளின் முலைகளைத்தாம் ஓவியச்சீலையில் நீ சித்திரமாக எழுதுவாயானால் அவை குழைய மாட்டா; முழு நிலவைப் போன்ற முகத்தை அப்படியே வரைவாயாகில் அது புன்னகை புரியாது; இரு புருவங்களையும் வில் போல் எழுதுவாயாகில் அவை வளைய மாட்டா; தளிர் போன்ற (மென்மையான) பாதங்களை வரைவாயாகில் அவை நடக்க மாட்டா; கிளியின் அலகு போன்றதும் பவளம் போன்ற தும் இலவு போன்றதுமாகிய (சிவந்த) வாயை எழுதுவாயாகில் அது கலக்காது. அவளுடைய நிறையாகிய (கற்பு) அமுதத்தை எங்கே எழுதுவாய்?*

*(நந்து-சங்கு; நாட்டிய-நிலைத்த; துவர்-பவளம் கிழி-துணி செங்கேழ்-சிவந்த நிறமுள்ள)*

**69. தலைவியை ஆற்றுதல்**
**வெண்பா**

*கூரிய வேல் போன்ற கண்களை உடைய தலைவி! துன்பம் மிகுந்து வருந்தி உயிர் மெலிந்து வாடுதலைத் தவிர்ப்பாய் மன்மதன் மலரம்பைக் கைக் கொண்டு சினத்துடன் நம் உள்ளத்தைப் பிளந்து வருத்தினால் அதற்கு மேல் திருச்செந்திலில் எழுந்தருளி யுள்ளவனும் வேங்கை மரமாய் நின்றவனுமாகிய முருகனின் கடப்ப மாலை (துணை) யுண்டு.*

*(அயில்-கூர்மை; அஞர்-துன்பம்; கடம்-சினம்; போழ்-பிளத்தல்;)*

**70. விலக்கல்**
**ஆசிரியத்துறை**

*தேவர்களைச் சிறையிலிருந்து விடுவித்து உயர்ந்த நெடிய வேலைக் கொண்ட அழகிய குமர வேளின் எழில்மிக்க திருச் செந்திலில் சூலுற்ற சங்குகள் (அலைகளினிடையே) சுழலும் அலை கள் தழுவும் துறைவா! குளிர்ந்த நீரையுடைய பொருநையின்*

*கரைகளில் உள்ள தெளிந்த நீண்ட வயல்களையுடைய நன்னாட்டவனே! இனி, எங்கள் பிறை போன்ற ஒளிமிக்க நெற்றியையுடைய தலைவியின் மலர்மாலைகள் நிறைந்த மார்பைத் தழுவும் எண்ணத்துடன் செல்வதானால் (ஒரு வார்த்தை கேள்!) பாலுண்ணும் இளமான்குட்டிகள் அஞ்சும் அகன்ற வாயுடைய புலிகளின் கூட்டம் ஆரவாரிக்கப் பருத்த தந்தங்களையுடைய யானை வேட்டையாடும் அரவம் ஒலிக்கும் பாலை நிலம் என்பதால் கவலை கொள்கின்றோம்; (எனவே அவ்வாறு வருவதைத் தவிர்வாய்.)*

*(துளங்கு-விளங்கும்; வியன்-அழகிய; துணர்-பூங்கொத்து; அகலம்-மார்பு; புணர்ப்பு-கூடுதல், தழுவல்; மறிமான்-மான் குட்டி; பகுவாய்-அகன்றவாய்; பணை-பருத்த; கோடு தந்தம்; நால்வாய்-யானை நளிர்-குளிர்ந்த; பொருநை-தாமிரபரணி நதி.*

### 71. வெண்பா

*உள்ள மகிழ்ச்சியுடன் அழகிய திருமகளைப் போன்ற அடியேன் அன்பாற் செல்ல, பெருமையுடன் உதிக்கும் சூரியனின் பிரகாசம் போல் ஒளி கொண்ட வேலாயுத மூர்த்தியின் திருச் செந்தில் நகரம்போற் சிறந்து மிகவும் (தலைவன்) உள்ளம் மகிழ்ந்தான்.*

*(தகவு-பெருமை; ஊழும்-உதிக்கும்; தினகரன்-சூரியன்)*

### 72. பிரியேன் என்றல்
### கலித்துறை

*கட்டவிழ்ந்த மலர் மாலை புறத்தே தாழும் கூந்தலை உடைய் வளே! அன்பிற்சிறந்தார் போற்றி விளங்கும் திருச்செந்திலில் உள்ளவரும் சிவனுடைய அக்கினி சிந்தும் நெற்றிக்கண்ணில் உதித்தவருமாகிய முருகவேளின் இணையடிகளைத் தொழாதவர் களைப் போல் வருந்த வேண்டாம் யான் என் ஐம்பொறிகளும் நிலை தடுமாறி, உயிர் பிரிந்தாலும் ஏழுபிறப்புகளிலும் உன்னைப் பிரியமாட்டேன்.*

*(நுதற்கண்-நெற்றிக்கண்; பிணி-கட்டு; தார்-மாலை; குழலி-கூந்தலையுடையவள்;)*

### 73. ஆசிரிய விருத்தம்

*கடல் முகட்டைக் கிழித்து எழும், ஏழு குதிரைகள் பூட்டிய, சிவந்த கொடியுடைய நீண்ட தேரில் ஆயிரம் கதிர்களோடு வரும் சூரியன் பிரகாசிக்கும் பகலும் இருளடையும்படி கிளைகளையும் செழிந்த இலைகளையும் கொண்ட புன்னை மரத்தின் நுண்ணிய தாதுகளைக் கொண்ட குவிந்த மொட்டுகளை ஒத்த வளைந்த*

*சங்குகளும் மணிக் குவியலும் நிலவைப் போய் ஒளிசிந்தும் திருச் செந்திலில் வீற்றிருக்கும் தேவர்கள் தலைவனே! ஏழு யானை களின் மேல் வெண்கொற்றக் குடையின் கீழ் கவரிகள் வீச இரு புறமும் இசைக்கருவிகள் முழங்க, இள அன்னங்கள் கூடியது போல் மங்கையர்கள் பக்கங்களில் சூழ்ந்து வரவும் முற்றிய அகிலின் மணங்கமழும் துண்டுகள் தேய்க்கப்பட்ட குழம்பு தடவப்பட்ட தோள்களில் கடப்ப மாலைகள் அசைய வேலைத் தாங்கி நீ பவனிவர நான் கண்டு உள்ளம் குளிர்வேனோ?*

*(கடாயானை-ஆண்யானை; எறிய-வீச; இன்னியம்-இனிய இசைக் கருவிகள்; குழீஇயனைய - கூடியது போன்ற; ஏழையர்-மங்கையர்; காழ்-முற்றிய; நறுங்குறடு - மணம் கமழும் துண்டுகள்; தேய்வு-குழம்பு; கண்ணி-மாலை; முகடு - உச்சி வாயில்; புரவி-குதிரை; அருணம்-சிவப்பு; சினை-மரக்கிளை; கோழ்-செழிப்பான; மருங்கு-ஒத்து; முடவு-முடமான; குடவளை - வளைந்த சங்குகள்;)*

## 74. ஆசிரியத் தாழிசை

*தலைவனும், சரவணப் பொய்கையில் உதித்தோனும், அழகிய பொற்கழல்கள் அணிந்த திருவடிகளை அன்பு மீதூரப் பணிபவர் கள், மேன்மையான நிலையடைந்து தேவர்களாய் வாழ்வார்கள்.*

## 75. மாலை இரத்தல் - கலித்துறை

*பழமையான அசுரர்களுடன் நடந்த கொடிய போரில் அவர் களுடைய உயிருடன் ஊனையும் உண்டு (வீறுகொண்டு) எழும் ஒளிமிக்க வேற் படையைத்தாங்கிய திருக்கரத்தவனே! செந்திற் பதியில் எழுந்தருளியுள்ள கந்தவேளே! இவள் (தலைவி) உன்னை அடைக்கலமாகக் கொண்டவள்; என்றும் உன்னுடைய மார்பில் அழகு செய்யும் கடப்பமாலையைப்பெற வேண்டும் என்று வருந்தி ஆருயிர் தளர்ந்து நிற்கின்றாள். (மாலைதந்து அருள் புரிவாய்)*

*(மார்பம்-மார்பு; தொடைக்கலந்து-தொடைக்கு அலந்து-மாலைக்காக வருந்தி;)*

## 76. இரங்கல் வெண்பா

*நாம் அனுபவிக்க நேர்ந்த வினைகளையெல்லாம் போக்கும் சிவனாரின் புதல்வனும், ஒலிக்கின்ற தெள்ளிய நீர்மிகுந்த திருச்செந்தூரில் வீற்றிருக்கும் தலைவனும் ஆகிய குமரவேள் அணிந்துள்ள பூமாலையைப் பெற நினைந்த, மணங்கமழ் மலர்கள் நிறைந்த கூந்தலையுடைய தலைவி, பிறபெண்கள் தத்தம் அலர் மொழிகளால் வசைகூறக் கேட்டு உள்ளம் தளர்வாளோ?*

*(தந்தமலரால்-தம்தம் அலர் மொழிகளால் வசைபேச.)*

### 77. இதுவும் அது
### ஆசிரியத்துறை

அகத்தியருக்குத் தர்மத்தை உபதேசித்த குமரவேள் வாழும் பெருமை மிகு திருச்செந்தூரில் கொலைத் தொழிலையுடைய வில்லேந்திய வேடர் மகளாம் வள்ளியை மண முடித்துவிட்டா லும் தம் உள்ளத்தில் என்பால் அன்பு குறைய மாட்டார். அவ் வாறு வள்ளியை மணந்து அன்பற்றாராயின், மிளகு மிகுதியாக விளையும் மலை நாடனுக்குக் கற்ற கல்வி நெறி என்னவாகும்? என்னவாகும்?

(கறி-மிளகு; வரை-மலை.)

### 78. வெண்பா

பெருகும் என் வினைகளை அழிப்பதற்கு ஆறு முகங்கள் எதற்கு? பன்னிரண்டு கண்கள் எதற்கு? (வினையை ஒழிக்க) இவை யாவும் வேண்டுமோ? நீறணிந்த சிவன்மைந்தனே! திருச்செந்திலில் வாழும் கற்பகமே! உன்னுடைய திருவருட்கண் ஒன்று போதாதோ! சொல்.

### 79. இரங்கல் - ஆசிரிய விருத்தம்

காதில் மணிக்குழைகளை யணிந்துள்ள மான் மகளாம் வள்ளியின் காதலர் எழுந்தருளியுள்ள திருச்செந்தூருக்கு செல்லும் நீண்ட கூந்தலை யுடையவளே! (என் தலைவர்) கல்வி கற்க விரும்பி என்னைத் தழுவுவதைவிட்டு அகன்றுவிட்டார். உயர்ந்து ஓங்கி மோதும் கச்சணிந்த இளமுலை மங்கையர் (ஏக்கத்தால்) இறந் திடும் போது உயிர்தங்கிய உடற்சுமையைத்தாங்கும் வண்ணம் (அவரைத்)தடுத்து (என்நிலையை) எடுத்து சொல்வார்களோ!

(மறித்து-தடுத்து; வார்-கச்சு; வார்-நீண்ட; புல்லு-தழுவுதல்)

### 80. இதுவும் அது

என் உள்ளத்தில் குடிபுகுந்த காதலர், வெறுப்பில்லாத கந்த வேளின் திருச்செந்திலை நாடாதவரைப் போல், (இறவாமல்) என் உயிரானது போவதும் வருவதுமாக ஊசலாடக் கனவிலும் நனவிலும் யான் நினைந்திருக்க என்னிடம் உரையாதவராய் என்னைவிட்டு நீங்கமாட்டார்.

(தொடுதல்-நினைத்தல்; இகல்-பகைமை, வெறுப்பு; இணங்கலார்-விரும்பாதவர்;)

### 81. சுனையாடல் கூறித் தோழி நகுதல்-இதுவும் அது

அன்னமே! மயில் போன்றவளே! பெரியோனாகிய வேற்படை வீரனாம் முருகனுடைய திருச்செந்திலில், நீராடுகின்ற மலர்கள்

மிக்க சுனை, சந்தனம் பூசி, மலர்களைச்சூடி, வாய் வெளுக்கவும் செய்யுமானால், விரும்பி நானும் சென்று (அச்சுனையில்) நீராடுவேன்.

(சந்து-சந்தனம்; ஆய்மலர்-தேர்ந்தெடுத்த மலர்கள்; வாய் விளிர்ப்பு - வாய் வெறுத்தல்; சேடன் - பெரியோன் சேவகன் வீரன்; நாடுவனானமே-நாடுவன்+நான்+அனமே (அன்னமே.)

### 82. தலைவன் கூற்று: இரங்கல் இதுவும் அது

நானிலத்திலும் எட்டுத்திசைகளிலும் நல்ல புகழும் கொண்ட, அன்றலர்ந்த தேன்சிந்தும் கடப்பமாலையணிந்த முருக வேளின் சிறந்த திருச்செந்தர் போன்ற மாதரின் (தலைவி) மானைப் பழிக்கும் கரிய விழிகள் வஞ்சகத்திற்கு இடமாகுமா னால் நானும் என் உயிரும் இந்த உலகும் உய்வது எவ்வாறு?

(இசை-புகழ்; கடம்பர்-கடப்பமாலையணிந்த முருகன்;)

### 83. தோழிகூற்று இரங்கல்
### ஆசிரியவிருத்தம்

பகைமையுணர்வு கொண்ட சூர பத்மனாகியோர் அஞ்சித் தோற்றோடச் சினந்து போரிட்ட முருகனின் மிகஉயர்ந்த திருச் செந்தூரில் எமக்கு (தலைவி) இடையூறு உண்டாகும்படி (பொரு ளீட்டும்) பேராசையால் நம்மிடம் தலைவர் இரக்கம் கொள்ள மாட்டார். அவ்வாறாயின், அணிந்துள்ள பொன் மாலையும் (விர கதாபத்தால்) எரிந்து சாம்பராகும். இதுமட்டுமோ! ஆபரணங்கள் அணிந்த இவள் (தலைவி) சோர்ந்து விழி நீர் பெருக்கும் போது இவளுடைய உயிர்படும் பாட்டை எவரே அறிந்தார்?

### 84. கலித்துறை

போற்றிப் பாடாத நாவும், வணங்காத தலையும், உள்ளத்தில் பாவித்து அன்புடன் விரும்பாத உள்ளமும், பிரமன் படைத்தான். அதனால் நான் ஏழு நரகமும் சென்று துன்பப் படாமல் உயர்ந்த நற்கதியை அடைவேனோ! கிரெளஞ்ச மலையைப் பிளந்த கூரிய வேலாயுதத்தைக் கொண்டவனே! பெருமைமிக்க மதியையுடைய திருச்செந்தில் வேலனே! உன்னுடைய திருவருள் என்னவென்று அறியேன்.

(வை-கூர்மையான; சேடு-பெருமை)

### 85. தலைவி கூற்று
### வெண்பா

அருட்கடலாகிய முருகன் வாழும் திருச்செந்திற்பதியில் உள்ள வளையணிந்த பெண்ணே! குவளைமலர் வியக்கும் (அல்லது

அஞ்சும்) விழிகள் நீரைப் பொழிய பொன் போன்ற அழகிய தனங்கள் (விரகவெப்பத்தால்) (முத்து மாலையிலிருந்து) முத்து களைச்சிந்த (எனக்கும் அவருக்கும் உள்ள) நட்பு ஒழியும்படியும் (நான்) மெலியும் படியும் இந்நாளில், பொருளீட்டக் கடல் கடந்து வேல் மன்னர் (தலைவர்) ஏன் பிரிந்து சென்றார்.

(முத்தம்-முத்து; நண்பு-நட்பு, உறவு)

### 86. பாங்கி கூற்று
### கலிப்பா

அன்றலர்ந்த தாமரையின் கட்டவிழ்ந்த மலரின் பொகுட்டில் வண்டுகள் உறங்க, வளைந்த சங்குகள் உறங்கும் வயல்கள் சூழ்ந்த குமரவேளின் பெருமை மிக்க திருச்செந்திலில், பாடும் வண்டுகள் மொய்க்கும் மலர்கள் நிறைந்த மேகம் போன்ற கூந்தற் பாரம் சோர, மணிகள் பதித்த ஆபரணங்கள் அணிந்த (தலைவியின்) பிறரின் நிந்தனைக்கு உரியதாகிவிட்ட தனித்த ஆவி (தலை வனைத்) தழுவாமல் நில்லாது.

(நாணளினம் - நாள் நளினம் - அன்று மலர்ந்த தாமரை; பொகுட்டகட்டு - தாமரைப் பொகுட்டில்; கோன் வளைந்த; பாணளி - பாண், அளி - பாடும் வண்டுகள், அலர் - மலர் அளகம் - கூந்தல்; பூண் - ஆபரணம்; புல்லாது - தழுவாமல்)

### 87. வெண்பா

நெஞ்சே! ஒரு நிலையில் நிற்காத நீயும் நிலைத்து நிற்கும் எனக்குப் பொல்லாதனவாகிய ஐம் புலன்களையும் அடக்கிப் பல நாளும் கார்த்திகேயனின் திருச்செந்திலைக் கண்ணாரக்காண்; திருச்செந்தில் உள்ள திசை நோக்கித் தொழு.

(பல் பகல்-பல நாட்கள் பார்த்திகையால்-பார்+திகையால் திகை-திசை)

### 88. கலித்துறை

ஒரு போதும் கணித்தறிய முடியாத திருச்செந்தில் வேல வனே! பாம்பின் பகையாகிய மயிலும் சேவற் கொடியும் பன் னிரண்டு ரத்தினக் குழைகளும் ஆறுதிருமுகங்களும் வெற்றி வேலும் குளிர்ந்த கடப்ப மாலையும் தண்டையணிந்த திருவடியும் என் கண்களை விட்டு அகலமாட்டா.

(பணி-பாம்பு; பதாகை-கொடி; வாகை-வெற்றி; தணி-குளிர்ந்த)

## 89. இரங்கல்
## இதுவும் அது

*குகப்பெருமானுக்குரிய, மகரந்தத் தாதுகள் சிந்தும் சோலைகள் சூழ்ந்த திருச்செந்திலில் குளிர்ந்த நிலவு போன்ற முகமும், தாழும் பொற்குழைகளும் முத்துப் போன்றநகையும் (தாமரை) அரும்பு போன்ற தனமும் உடைய மான் போன்ற உமைமைந்தன் தீட்டிய ஓவியம் போல் விளங்கும் மயில் போன்றவளை விட்டு அகன்றால் நீங்குவதும், கூடினால் தங்கி யிருப்பதுமாகியது என்உயிர்.*

## 90. தலைவியை வியத்தல்
## ஆசிரிய வண்ண விருத்தம்

*மயிலைச் செலுத்தி அண்ட கோளத்தின் உச்சி அதிர, அழகிய பொன் மலையாகிய மேருமலை பொடியாக, அழகிய கையில் உள்ள நீண்ட கூரிய வேல் சுழல தேவர்கள் வாழ, உலகை வலம் வந்த ஜோதி ரூபனாகிய சிவன் அருளிய (அல்லது ஜோதி வடி வானவனும் அருள் நிறைந்தவனும் ஆகிய) குமரவேளின் திருச்செந் தூருக்கு ஒப்பானவளின் (தலைவியின்) குயில் சுவையுள்ளபாகு போன்ற மொழியும், மயிலைப் போன்ற சாயலும், கொடி போன்ற இடைமெலிந்து வாடி நூல் போல் விளங்கும் தன்மையும் வானவில் போன்ற நெற்றியும், நீலமணி போன்ற இருவிழிகளும், இலவு போலவும் தம்பலப் பூச்சி போலவும் விளங்கும் செவ்விதழும் வியப்பைத்தருகின்றன.*

*(கடவி - செலுத்தி, முகடு - உச்சி, பிதிர - பொடியாக, அயில் - வேல்; இயல் - தன்மை; இந்திரசாபம் - வானவில், இந்திர நீலம் - நீலமணி இந்திர கோபம் - தம்பலப்பூச்சி)*

## 91. கார் கண்டிரங்கல்
## ஆசிரிய விருத்தம்

*(கார்காலம் தோன்றியதால்) தம்பலப் பூச்சிகள் எழுந்து பறந்தன; மேகங்கள் முழங்கின; காந்தள் மலர்கள் நிரம்ப மலர்ந் தன; நீண்ட வானவில் வளைந்து தோன்றியது தோகையுடைய மயில்கள் மிகுந்து திரிந்தன; (இன்றும்) மாலை சூடிய தலைவா வரவில்லை, கடப்ப மலர்களின் மணம் கமழும் மார்பினராகிய முருகவேளின் திருச்செந்தில் வாழும் பெண்ணின் உள்ளத்தில் துயரம் நிறைந்தது; அவளுடைய உயிர் தளர்ந்தது; விழிகள் சோர்ந்து நீர்த்துளிகள் சிந்தின.*

*(கோபம்-தம்பலப்பூச்சி; கோடல்-காந்தள்மலர்; சாபம்-வானவில்; தோகை-மயில்கள்; நீபம்-கடப்பமலர்; நேரிழை-நேரிய*

*அணிகலன்கள் (இங்கு அணிகலன்களையணிந்த பெண்ணைச் சுட்டியது.) சோபம்-துயரம்; கண்டுளி-கண் துளி-நீர்த்துளி.)*

### 92. கலித்துறை

*நரகங்கள் ஏழிலும் விழுகின்றவர்களின் கண்கள் (அன்பு மிகுதியால்) நீர் சிந்தமாட்டா; உடல் தளராது; உடல் வணங் காது; நா துதி மொழிகளைச் சொல்லாது; உள்ளம் நெகிழாது; கைகள் குவியமாட்டா; ஒரு போதும் அவர்கள் வேதங்களின் பொருளைத் தெளிந்து உணரமாட்டார்கள்; தேவர்களின் சேனாபதியான முருகனைத் திருச்செந்திலிற் கண்டு தொழ மாட் டார்கள்.*

### 93. பாங்கி ஆற்றுதல்
### குறள் வெண்பா

*கிரௌஞ்ச மலையை வேலாற் பிளந்த முருகப் பெருமானு டைய திருச்செந்தூரை அடையாதவர்களைப் போல், நம்மைவிட்டுப் பொருள் ஈட்ட விரும்பியவர் (தலைவன்) புறப்படமாட்டார்*

*(போழ்வார் - பிளந்தவர், வீழ்வார் - விருமபியவர் எழா - புறப்படமாட்டார்)*

### 94. பிச்சியார்
### ஆசிரிய விருத்தம்

*தனக்கு ஒப்பானவர் எப்போதும் இல்லாத புண்ணியனும் நெற்றிக்கண்ணையுடைய கடவுளுமான சிவனாரின் புதல்வன் முருகனின் அழகிய மயில் போன்றசாயலும், திருச்செந்திலதிப னின் கைவேலைப் போல், கொலை செய்யும் வேல் போன்ற கண்களையுடைய பிச்சியாரே, நூல் போன்ற இடையைக் குறைத்தும் தனங்களைப் பெருக்கியும் எப்போதும் (காம) நோயே தந்தீர்கள். நீல மேகம் போன்ற கூந்தலை முடித்து என் உயிரைக் குறைப்பதுதான் உங்களுக்கு நீதியோ! (பிச்சியார் - சைவத்தவப் பெயர், சிவவேடம் தாங்கியுள்ள சைவப்பெண், போலி - ஒப்பு, பணை முலை - பருத்தமுலை)*

### 95. தலைவி பாங்கிக்கு உரைத்தல்
### கலிவெண்பா

*கஸ்தூரி கமழும் கூந்தலையும் அழகிய நெற்றியையும் உடையவளே (பாங்கி) தேன் சிந்தும் வெட்சி மாலையணிந்த திருச்செந்தில் முருகனுக்கு அன்பர் (தலைவன்) மதம்பிடித்ததும், வளைந்த தந்தத்தையுடையதுமான யானையை (அது என்னைத் தாக்காதபடி) விலக்கிக்காத்தும், காட்டு வெள்ளத்திலிருந்து*

காப்பாற்றியும் அருள்புரிந்து என் உடல் முழுதும் நெகிழ உயிரிற் கலந்தவரை (என்னை நாடி) வருவாய் என நான் எப்படிச் சொல்லுவேன்?

(தானம்-யானைமதம்-குனிகோடு-வளைந்த தந்தம்; தந்தி-யானை; குடிஞை-குடிசை; கலுழி-வெள்ளம்; செச்சை-வெட்சி மலர்; நானம்-கஸ்தூரி, புழுகு.)

### 96. கலிவெண்பா

கிரௌஞ்ச மலை வீழ்த்திய, செந்தில்வாழ் அழகனே! இன்று வறுமையில் வாடுகின்றேன் ஆதலாலும், அன்று (வளமாக வாழ்ந்த போதும்) கொடிய வினையேன் சிறந்த தவம் செய்ய வில்லை. மீண்டும் மீண்டும் பிறக்கும் இத்தன்மையிலே வருந்திய உள்ளத்தோடு கவலைப்பட்டு நில்லாமல், கழலணிந்த உன் மலர்ப்பதத்தைச் சென்று தொழும்படியாக (அடியேனுக்கு) அருள்புரிவாயாக

(நல்குரவு-வறுமை; ஆன்ற-சிறந்த கன்றும்-வருந்தும், கவல்-கவலை; குழகா-அழகனே! இறையோனே.)

### 97. தாய் கூற்று
### கலித்துறை

என் மகள், (விரக மேலிட்டு) சிவந்த திருமேனியனே என்பாள்; திருச்செந்திலில் உள்ளஎம் தந்தையே என்பாள்; சிவந்த வடிவேலுடைய கையனே என்பாள்; கங்கையின் மைந்தனே என்பாள்; கண்கள் நீர் சிந்தப் பலதடவை எழுவாள்; மீண்டும் (பஞ்சணையில்) விழுவாள்; பிறை நிலவைப் பார்த்துக் கொடிய வனே என்பாள்; இதுவன்றி வேறு எதுவும் அறியாள்.

(விளங்கிழை-விளங்கும் இழைத்த ஆபரணங்களை யணிந்தவள்)

### 98. தலைவி கூற்று
### ஆசிரிய விருத்தம்

கரிய விழிகளையுடைய (அல்லது மழை போல் கருணை பொழியும் விழிகளையுடைய) அம்பிகை தன் மலர் போன்ற மெல்லிய கைகளை வளைத்து கச்சணிந்த முலைகளில் பால் வழிந் தோட அழைக்கவும் (வாராமல்) நின்று நடன மாடிய, மணிகளை உடைய சிலம்பு ஒலிக்கும் சிவந்த திருவடிகளை உடையவனே! தென் திருச்செந்தில் வேலவனே! நான் (தலைவனைக் கூடுதலை விரும்பிக்) கூடலிழைத்தலும் அதுகூடாமல், கண்ணிமைகள் இரவு முழுதும் (மூடாமல்) வருந்தவும் கூடவில்லை!

(உழைக்கும்-வருந்தும்; மழைக்கண்-கருங்கண்; மழைபோல் அருள் பொழியும் கண்; கோட்டி-வளைந்து; வார்-கச்சு; பீர் முலைப்பால்; அலம்பு-ஒலிக்கும்)

### 99. கலிப்பா

தோள்வளை யணிந்த பன்னிரண்டு தோள்களை உடைய வர்க்கு (முருகனுக்குத்) திருச்செந்திலில் எழுந்தருளிக் கூரிய வாயையும் (அலகு), வலிமைமிக்க கால் நகங்களையும் கொண்ட சேவலைக் கொடியாக வெற்றியுடன் உயர்த்திய வேலனுக்கு, அடியார்களைப் போல் உள்ளம் உருகவும் அன்பு இன்னதென்று அறியாமலும் உள்ள என் அற்பமான சொற்கள், பெருமை இவ் வளவு என்று சொல்லி முடியாத நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப் படையாகுமோ!

(தொடி-தோள்வளை; வடி-கூரிய; வள்ளுகிர் வலிமை மிக்க கால் நகம்; வலன்-வெற்றி)

### 100. வெண்பா

நெஞ்சமே! மதுவுண்வண்டுகள் ஒலிக்கும் சோலைகள் சூழ்ந்த திருச்செந்தூருக்கு நீ அன்புடன் சென்று, ஏழ்வகைப் பிறப்பிலும் பிறந்து உழலா வண்ணம் செம்மேனி யம்மானாம் முருகனைத் தொழுது மயிலும் வேலும் துணையெனச் சொல்வாய்.

(ஆர்க்கும்-ஆரவாரிக்கும் களிவண்டு-தேனுண்டவண்டு; அறையும்-ஒலிக்கும்; கூர்க்கும்-மிகுந்த;)



# பாட்டு முதற்குறிப் பகராதி

## பக்க எண்

★ நட்சத்திரக் குறியிட்டுள்ள முப்பது பாடல்களும் தினசரி பாராயணம் செய்யும் திருச்செந்தில் முருகக் கடவுள் தோத்திரப்பா



# குமரன் குன்றம் திருப்புகழ் மன்றம்

குமரன் குன்றம், குரோம்பேட்டை சென்னை - 600 044.

## மன்றத்துப் பணிகள்

- ★ நாள் தோறும் மாலை 5.30 மணி முதல் 7.00 மணி வரை திருப்புகழ், தேவாரம், இலவச இசை பயிற்சி வகுப்பு.
- ★ மாதந்தோறும் ஷஷ்டி, கிருத்திகை, விசாக படி பஜனை விழா, திருப்புகழ் இசையுடன், சொற்பொழிவு.
- ★ ஆண்டுதோறும் தமிழ்ப் புத்தாண்டு முதல்நாள் மாபெரும் படித்திருவிழா, ஆனி மூலம் ஸ்ரீ அருணகிரிநாதர் விழா, ஐப்பசி மகா கந்த ஷஷ்டி விழா முதலிய சிறப்பு விழாக்கள்.
- ★ இப்பகுதியிலுள்ள பள்ளிச்சிறார்களுக்கு வாரம் ஒரு தினம் திருப்புகழ் பயிற்சி வகுப்புகள்.
- ★ பணி செல்லுவோர்கள் இரு பாலர்களுக்கும் இலவச சிறப்பு திருப்புகழ் பயிற்சி வகுப்பு ஞாயிறு தோறும் மாலை 6.00 - 7.00 மணி வரை நடைபெறும்.
- ★ ஆலயத்தில் நடைபெறும் அனைத்து விழாக்களிலும் கலந்து கொண்டு பணி புரிதல்.
- ★ முருகுகவி அறப்பணி திருப்புகழ் ஆராய்ச்சி மையம் மூலம் திருப்புகழ் நூல் வெளியிடுதல், நூலகம் அமைத்தல் முதலியன.